குடும்பத்துடன் களிக்க...
# கல்கி
KALKI
12.6.2005
ரூ.6.00





"அடுத்த இலக்கு ஹாலிவுட்தான்!"
-ஷங்கர்

"சாப்பாட்டுல விஷம் கலந்தாங்க!"



தமிழக மீனவர்கள் கண்ணீர்க் கதை!

"ஐயோ... காதலிக்காதீங்க!"
-அலறுகிறார் 'பிப்-14' ஹீரோயின்!

## ஆசிரியர் பக்கம்

நடாலி கிலிபோவா - வெள்ளிக் கிலுகிலுப்பையை ஆட்டியது போன்ற பெயர். அவர் சிரிப்பும் செழுமையும்கூட வெள்ளியை உருக்கி வார்த்த மாதிரிதான் இருக்கின்றன. உலக அழகி..! இல்லையில்லை... பிரபஞ்ச அழகி!

உலகின் மிக அழகான ஐம்பது பெண்களின் வரிசையில் ஒன்பதாவது இடம் ஐச்வர்யா ராய்க்கு. ஒன்பதாவது இடத்துக்கு அவர் 'தள்ளப்பட்டதாக' அதிர்ந்து வருந்துகின்றன செய்தித் தாள்கள்.

இரண்டு தினங்கள் கழித்து, செய்தித்தாளின் அதே இடத்தைப் பிடிக்கின்றனர் பிளவுபட்ட இதழ்களுடன் சிரிக்கும் குழந்தைகள். இந்தத் தளிர்களின் பிறவி ஊனத்தைச் சீர் செய்ய, தமிழக அரசு முனைந்து பொறுப்பேற்றுள்ளது என்ற செய்தியைச் சித்திரிக்கும் புகைப்படம். முதல்வரிடம் பொம்மை பரிசு பெறும் பெயரிடப்படாத சிறுமியின் முகப் பொலிவு, எந்தப் பட்டியலிலும் இடம் பிடிக்காது என்றாலும், இதுவரை தேர்வான உலக, பிரபஞ்ச, தேசிய, மாநில, மாநகர அழகிகளையெல்லாம் கப்பரை ஏந்தச் செய்யக்கூடியது.

அழகு என்பது என்ன...? அதன் வரையறைகளை யார், எதற்காக நிர்ணயிப்பது? அழகை எடை போடும் அளவுகோல் எது...? கண்ணா? அறிவா? மனமா? இவற்றின் ஒட்டுமொத்த தீக்ஷண்யமா? அல்லது இவற்றைக் கடந்த உள்ளுணர்வின் நுண்ணலை வரிசையா...?




• அழகு



• பேரழகு!

# அழகை சிறை மீட்போம்!

'ப்ரியத்தோடு நோக்கின் சௌந்தர்யம்... அல்லங்கில் அல்ல' (ப்ரியத்தோடு பார்த்தால் அழகு; இல்லையெனில் இல்லை) என்று மலையாளப் பழமொழி பதில் சொல்கிறது.

அழகை தோற்றத்தோடு மட்டும் தொடர்புபடுத்திச் சிறை வைக்கும் அறியாமை பெருகி வரும் காலத்தில் அடிக்கடி நினைவு கொள்ள வேண்டிய பழமொழி: ப்ரியத்தோடு நோக்கின் சௌந்தர்யம்.

ப்ரியம் என்பதற்கு அன்பு, மரியாதை, பக்தி என்றும் பொருள் விரிகிறது.

சத்தியத்தின் ஒளி சுடர்விடும் இதயம், எல்லாவற்றையுமே ப்ரியத்துடன் பார்க்கும். 'உண்மையே அழகு; அழகே உண்மை. இதை அறிந்தால் அனைத்தும் அறிந்தவனாவாய்' என்று கீட்ஸ் சொன்னது புதிரல்ல...

"விருப்பு வெறுப்பின்றி வாழ்க்கை நடத்தும் பக்தர்களின் முகத்தை பகவான் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கிறான். நிலவை ஏக்கத்தோடு நோக்கும் சகோர பதியைப் போல் நோக்குகிறான்..." (பரம ஹம்ஸ முக சந்திர சகோரே) என்று பாடிய சதாசிவ பிரம்மேந்திரர், கடவுளை மனிதனின் ரசிகனாக்கியது வெறும் கவிதை நயத்துக்காக அல்ல... தத்துவ விளக்கமாக மட்டுமே அல்ல.

அழகை சிறையிலிருந்து விடுவித்து மகுடம் சூட்ட, நம் இதயத்தில் அன்பைச் சிறை வைத்தால் போதும். காண்போர் எல்லோருமே நிலவை உருக்கி வார்த்ததுபோல்தான் தெரிவார்கள்.

'பராசக்தி'யின் நியூ வெர்ஷன் படு கலக்கல்.
மதுரை, என். பாலகிருஷ்ணன்.

தேர்தலில் வெற்றி தோல்வி என்பது சகஜம் என்பதை உணராமல், மூத்த அரசியல்வாதியான கலைஞர் அறிக்கை விட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி எழுதப்பட்ட தலையங்கம் அருமை. வெற்றி பெற்றவரை, தோல்வியடைந்தவர் எப்போது வாழ்த்துத் தெரிவித்து அறிக்கை விடுகிறாரோ, அப்போதுதான் நாகரிக அரசியலின் அத்தியாயம் தமிழகத்தில் துவங்கும்!
ஆலங்குளம், ரா. சாலமோன்.

காஷ்மீர் பிரச்னை, காவிரிப் பிரச்னை, அயோத்தி பிரச்னை இவை எல்லாம் தீரும் வரை, நடிகை - நடிகர் காதல் போன்ற விஷயங்களைக் கேட்கவே கூடாது என்கிறாரா, அரகண்டநல்லூர் வாசகர்?
சென்னை, ச. இராசன்.




வலை பாய்ந்த செய்திகள் அனைத்தும் அலைபாய வைத்துவிட்டன. அதிலும் 'தண்டால் எடுக்கும் சிறுவன் மீது துள்ளிக் குதிக்கும் யானை'யின் படம், மெய்யாலுமே அட!
கடலூர் துறைமுகம், இரா. சண்முகம்.

ஆதிகேசவன் மகள் பேட்டிக்கு 'எங்க அப்பா தங்க அப்பா' என்று தலைப்பு வைத்த உமது குறும்பை வெகுவாக ரசித்தோம்.
சிதம்பரம், ஸ்ரீவித்யாகாளிதாஸ்.

குற்றம் காணும் பெரியவர் மத்தியில், குணம் மட்டும் எடுத்துக்கூறிய குழந்தையின் சுபாவம் காட்டிய 'அடையாளம்' சிறுகதையும், ஓவியர் வேதாவின் படமும் அருமை!
மதுரை, ரா.ரா.

சில பள்ளிகளுக்கு பளார், பளார்! ஒரு விவசாயக் குடும்பம். அம்மா படிச்சது 5-ம் வகுப்பு வரை. ஆனால் மகளோ, +2 பரீட்சையில் மாநிலத்திலேயே முதலாவது ரேங்க் வாங்கியிருக்கிறார். 12ம் பக்க கட்டுரை, "பெற்றோர் பட்டதாரிகளாக இருந்தால் மட்டுமே குழந்தைக்கு அட்மிஷன்" என்று கூறும் பல நர்ஸரி பள்ளிகளுக்கு விடப்பட்ட அறை!
சென்னை - 29, ஜி. செந்திவேல்.



✉ மூன்று 'வி'(ஜயகாந்த், ஷால், வேக்) ர்ரிப்பீட்டு அனுபவங்கள் வித்தியாசப்பட்டு வியக்க வைத்தன!
நெய்வேலி - 3,
எஸ். இந்துமதி.

✉ நெற்றிப் பொட்டளவு கதையானாலும், 176 எழுத்துக்களில் நெஞ்சினை நெருடும் கருவை அடக்கி விட்டார் ஷெல்வா! ('நியாயமா சாமி?')
கு. கழுகாசலபுரம்,
எஸ்.ஏ.கேசவன்.



## வாரம் ஒரு வாசகர்!

✉ குத்து மதிப்பான விஷயங்களுக்கு மேக்கப் போடும் பழக்கம் இல்லாத நீங்கள், 'தங்க' மகள் பேட்டியில் உங்கள் நிலையை உறுதிப் படுத்தி விட்டீர்கள்.
திருநெல்வேலி - 11,
எஸ்.ஆர். ஸ்வாமி.

✉ பரமுவின் லாலு பிரசாத் யாதவிடம் கேட்கக்கூடாத கேள்விகள் சுவாரஸ்யமாக இருந்தன. குறிப்பாக உங்க ஃபேவரிட் நடிகர் எங்க ஊர் ராமராஜன்தானே...?

# உங்கக் குறும்பு, தங்கக் குறும்பு!

என்ற கேள்வி சூப்பர்.
சென்னை - 73, கோ. கல்யாணசுந்தரம்.

✉ டீன் ஏஜில் சிலர் மீது ஈர்ப்பு ஏற்படுவது சகஜம்தான். அதை ஒளிவு மறைவின்றி ஒப்பக் கொள்பவர்கள் சிலரே. அந்த வகையில் மாளவிகாவின் 'காதல் சிறகு'கள் ரசிக்கும்படி இருந்தது.
சென்னை - 9, வி.என். கோபால்.

✉ தமிழ் சினிமாவில் 'சைக்கோ' பற்றி டாக்டர் ஷாலினி அலசி ஆராய்ந்து சொன்ன கருத்துகள் அருமை!
கரூர், பாரதிமகன்.


கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22251522, 22250623, 22251324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

பரத்துடன் 'பிப்ரவரி 14', ஜெயம் ரவியுடன் 'தாஸ்' என வந்த வேகத்தில் இளம் நாயகர்களுடன் டூயட் பாடிக் கொண்டிருக்கிறார், தமிழ் சினிமாவின் மற்றொரு கேரள வரவான ரேணுகா மேனன். தனக்குப் பிடித்த பதினாலு விஷயங்களை பகிர்ந்து கொள்கிறார்.



# "ஐயோ... காதலிக்காதீங்க!"

## – அலறுகிறார் ரேணுகா மேனன்

❖ 'தாஸ்' படத்துல ஜெயம் ரவி ஃபுட்பால் ப்ளேயர்ங்கிறதால எனக்கும் ஃபுட்பாலை ரொம்பப் பிடிக்கும். 'பிப்ரவரி 14'ல் நான் பேஸ்கட் பால் ப்ளேயர். இந்த விளையாட்டுகளுக்கும் எனக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. நமக்கு ஸ்போர்ட்ஸ்னா, அது கிரிக்கெட்தான். அதிலும் அனில் கும்ப்ளேன்னா நான் க்ளீன் போல்ட்!

❖ எனக்கு ஐஸ்க்ரீம், ஸ்வீட்ஸ் ரொம்பப் பிடிக்கும். ஆனா வாயைக் கட்டறது எவ்வளவு கஷ்டம்னு நடிகையா இருந்தாதான் புரியும். என்னங்க... ஒண்ணு இழந்தாதான் இன்னொண்ண அடைய முடியுமா? அதுவும் சரிதான்.

❖ கேரள மக்களுக்கு தமிழ்ப் படங்கள் பார்க்கிறது ரொம்பப் பிடிச்ச விஷயம். 'காதல் கோட்டை'யை இன்னமும் என்னால மறக்க முடியாது. கமலியும் சூர்யாவும் சேருவாங்களா சேரமாட்டாங்களான்னு க்ளைமாக்ஸ் வரை தவிச்ச தவிப்பு இருக்கே...!

❖ நடிகர்களில் முதல் மாசம் விஜய் பிடிக்கும்னா, அடுத்த மாசம் விக்ரம், அதற்கடுத்த மாசம் விஜய்ன்னு என்

டேஸ்ட் மாறிட்டே இருக்கும். தமிழ் நடிகைகளில் என் ஃபேவரிட் த்ரிஷாதான். க்யூட்டா, பூ மாதிரி இருக்காங்க.



❖ ஹிந்திப் பாடகி அல்கா யாக்னிக் பாட்டுன்னா வேற சொர்க்கமே தேவையில்லை. அவங்க பாட்டுக்கு நான் வாயசைக்கணும், நேரில் சந்திக்கணும்னு சின்னச் சின்ன ஆசைகள் இருக்கு.

❖ கேரளாவை விட பெங்களூரும் அதன் கிளைமேட்டும் ரொம்பவே ஈர்க்கும். எம்.ஜி.ரோடு, பிரிகேடியர் ரோட்டி லெல்லாம் என்னை அடிக்கடி பார்க்கலாம். அங்கே ஃபேஷன்கிற பேர்ல சில பெண்கள் சிகரெட் பிடிக்கிறதெல்லாம் பிடிக்கவே பிடிக்காது.



❖ "ஏமிகாரு போஜன்சேஸ்த்தாவா?" ஆமாங்க, சுந்தரத் தெலுங்கு மொழியை ஏனோ ரொம்பப் பிடிச்சிருக்கு. அதுல நல்ல ரிதம் இருக்கு. அதோட எழுத்துக்கள் கூட ஜிலேபி மாதிரி ச்சோ ஸ்வீட்டா இருக்கும்!

❖ கேரளப் பெண்களை தமிழக மக்கள் கைநீட்டி வரவேற்பது ரொம்பப் பிடிச்ச விஷயம். தமிழ் சுலபமா புரியறதால, எங்களுக்கும் பெரிய தொந்தரவு இல்லை.

❖ ரம்யா, ரஞ்சிதா, ஆஷா, மஞ்சு, சௌம்யா எல்லாம் என் நெருங்கிய தோழிகள். அவங்க கூட சுதந்திரமா அரட்டையடிச்சு, ஊர் சுத்தப்பிடிக்கும். பாக்கெட் மணியில் மேக்-அப் செட் வாங்கிக் கொண்டாடுவோம்.

❖ உலகமே ஐஸ்வர்யா ராயை தலையில தூக்கி வைச்சு கொண்டாடினாலும், எனக்கு சுஷ்மிதா சென்தான் பிடிக்கும். அந்த உயரம், மந்தகாசப் புன்னகை எல்லாம் பொறாமையோடு ரசிப்பேன்.

❖ அரசியலில் அடல் பிகாரி வாஜ்பாய் ரொம்பப் பிடிக்கும். கறை படியாத கரங்களுக்குச் சொந்தக்காரர். எனக்கு வோட்டுப் போடற வயசு வந்தாலும் ஒருமுறை கூட வோட்டு போட்டதில்லை. பச்!

❖ 'மௌனராகம்' ரேவதி மாதிரி மழையில் நனைந்து ஆடிப்பாட எனக்கும் ஆசைதான். காய்ச்சலுக்கும் அம்மாவோட திட்டுக்கும் இத்தனை நாளா மழையின் சுகத்தை ருசிக்காத நான், சினிமாவுல அடிக்கடி நனைஞ்சு அந்த ஆதங்கத்தைப் போக்கிக்கிறேன்.

❖ பணம் பத்தும் செய்யும். பணம் இல்லாட்டி யாரும் யாரையும் மதிக்க மாட்டாங்க. கரன்சியை விட அமைதியான வாழ்க்கையே மேல் என்கிற தத்துவமெல்லாம் பேசமாட்டேன். ஆனாலும் எந்தளவு பணம் சம்பாதிக்கறோமோ, அதே அளவு நல்ல குணங்களையும் சம்பாதிக்கணும்.

❖ எனக்குக் காதலைப் பிடிக்கும். ஆனா காதலிக்கறவங்களைப் கண்டாலே பிடிக்காது. என் தோழிகள்ல யார்யாரெல்லாம் காதலிக்கிறாங்களோ, அவங்களுக்கெல்லாம் காதலோட கோர முகத்தை எடுத்துக்காட்டி திருத்த முயற்சிப்பேன். "இது செட்டே ஆகாது"ன்னு நான் சாபமிட்ட எல்லா ஜோடிகளும், கடைசியா பிரிஞ்சுதான் போனாங்க. சரி, உங்களுக்குத் தெரிஞ்சவங்க யாராவது லவ் பண்றாங்களா? எங்கிட்ட அனுப்புங்க.

**- ச.ந.கண்ணன்**

அட்டை, படங்கள்: **ஸ்ரீஹரி**



## காதோடு ஒரு கதை!

அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வ'னை நாடக வடிவில் சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்பி வருகிறது. ஒவ்வொரு சனிக்கிழமையும் இரவு 8 மணியிலிருந்து 8.30 வரை ஒலிபரப்புகிறது. தமிழகத்தின் பிற நிலையங்களும் (கோவை, திருச்சி, திருநெல்வேலி) ஒலிபரப்புகின்றன. கல்கி அன்பர்கள் கேட்டு மகிழலாமே!

- பாரதி தேவராஜ்


More than 25 Models
Sofa Sets
More than 25 Models
Bedroom Sets
Entertainment Sets
More than 10 Models
Price Tags that fit your Money Bags
Sathya
Furniture World
Since 1968
Lifetime Investment
One of India's Biggest Furniture Showroom
H.O : Mylapore ( 20,000 sq.ft ) 139, R H Road, Next to Sanskrit College, Ch-4. Ph : 24982930 / 31
Anna Nagar ( West ) DABC Bldg., 6, M T H Road, Padi, Opp. TVS, Padi, Ch-50. Ph : 52155929
Velachery Paramount Park, 358, Velachery-Tambaram Main Rd, Ch-42. Ph : 52144929
Poonamallee 58, Poonamallee High Road, Near Bus Stand, Ch-56. Ph : 98414 29129
Coimbatore 266, Mettupalayam Road, Near Saibaba Temple Bus Stop, Cbe - 43. Ph : 2452929 / 30
Almirahs
More than 100 Models
Wardrobes
More than 10 Models
Sofa-cum-Beds
More than 10 Models
More than 25 Models
Computer Tables
Also Available
Institutional Furniture
Slotted Angle Racks
Industrial Lockers
Kitchen Cabinets
Filing Cabinets
Book Case
We also undertake all kinds of Interior Works
Exchange Option available for Old Furniture
Major Credit Cards accepted
Dining Sets
More than 25 Models

# “சாப்பாட்டுல

“இங்கு எங்களுக்கு நடக்கும் கொடுமை எந்தத் தமிழனுக்கும் நடக்கக் கூடாது. இங்கு நாங்கள் வந்தவுடன் தமிழன் என்றால் சிரிக்கிறார்கள்... தமிழ் மொழியில் பேசினால் கைகொட்டி கேலி செய்கிறார்கள். லெட்ரினுக்குப் பக்கத்தில்தான் படுக்க வைக்கிறார்கள். எருமை குளிக்கும் இடத்தில் குளிக்கச் சொல்கிறார்கள். இத்தனை கொடுமைகளுக்கும் காரணம் நாங்களா... அரசாங்கமா...?”

- பங்களாதேஷ் அரசாங்கத்தால் சிறைப் பிடிக்கப்பட்டு, தற்போது மத்திய - மாநில அரசின் உதவியால் மீட்கப்பட்டுள்ள மீனவர்கள் கேட்ட கேள்வி இது. சென்னையைச் சேர்ந்த ஆறு மீனவர்கள், பங்களாதேஷ் சிறையிலிருந்து தங்கள் வீட்டுக்கு அனுப்பிய கடிதத்தில்தான் இப்படி எழுதியிருந்தார்கள். பத்து மாத காலப் போராட்டத்துக்குப் பிறகு உயிருடன் மீண்டு வந்துள்ள அவர்களை, சென்னை ராயபுரத்தில் சந்தித்தோம்.

“கடலிலும், பங்களாதேஷ் சிறையிலும் பட்ட கஷ்டங்கள் - சந்தித்த இன்னல்கள் பற்றிச் சொல்லுங்கள்...” என்று கொஞ்சம் தயங்கியபடியே கேட்டோம்... ஆனால் அவர்களோ கொஞ்சமும் தயக்கமின்றி தங்களுடைய திக்... திக் நிமிடங்களை நம்மிடம் விவரித்தனர்.

முதலில் நம்மிடம் பேசிய மீனவர் செந்தில்குமார்,

“போன வருஷம் ஜூலை மாதம் 26ஆம் தேதி கடலுக்கு தொழில் செய்ய நாங்க ஆறு பேரும் போனோம். கடலுக்குள்ள மொத்தம் எட்டு நாள் தங்கல்... ஓரளவுக்குத் திருப்தியா மீன் சேர்ந்தவுடனே, அஞ்சாவது நாளு கரைக்குத் திரும்பிக்கிட்டு இருந்தோம்... அப்பத்தான் திடீர்னு எங்க போட்டோட இன்ஜின் ரிப்பேரா யிடிச்சு... எவ்வளவோ முயற்சி பண்ணியும் சரியாகவே இல்ல... அஞ்சாறு நாள் ஆயிடிச்சு. திடீர்னு நங்கூரம் வேற அறுத்துக்கிட்டு கடலுக்குள்ள முழுகிடிச்சு... போட்டு திக்குத்தெரியாம எங்கெங்கேயோ அலை பாயுது... ஆஹா... நம்ம கதை அவ்ளோதான்னு நினைச்சிட்டோம். நாங்க கொண்டு வந்த சாப்பாடு வேற தீர்ந்து போச்சு... கடல்ல மீன் பிடிச்சு கொஞ்ச



• செந்தில்குமார்

## தமிழக மீனவர்கள் கண்ணீர்க் கதை!

# விஷம் கலந்தாங்க!"



* பெற்றோருடன் சதீஷ்குமார் - ராஜேஷ்

நாளு நெருப்புல சுட்டு சாப்பிட்டு வயித்தை நிரப்பிக்கிட்டோம்... கொஞ்ச நாள்ல தீப்பெட்டி வேற தீர்ந்து போயிடிச்சு. நாலஞ்சு நாளு வெறும் உப்புத்தண்ணிய மட்டும் குடிச்சிக்கிட்டு இருந்தோம். உடம்பெல்லாம் ரொம்ப வெலவெலத்துப் போயிடிச்சு. கடலுக்குள்ள மாட்டி முப்பத்திரெண்டாவது நாள்தான் எங்க வாழ்க்கைல ரொம்ப கொடூரமான காலகட்டம் ஆரம்பிச்சது'' என்று சொல்லும்போதே நா தழுதழுக்க, மேலும் பேச முடியாமல் அழ ஆரம்பித்து விட்டார் செந்தில்குமார்.

''ஆமாங்க... அன்னியிலிருந்துதான் நாங்க பசிக்கு பச்சை மீனைப் பிடிச்சு, தோலை உரிச்சிட்டு, அப்படியே சாப்பிட ஆரம்பிச்சோம். பச்சை மீனு வாய்க்குள்ள போறப்போ ஒரு குமட்டு குமட்டும் பாருங்க... அப்பப்பா... பச்சை மீனை சாப்பிட்டாலும் சாகணும்... சாப்பிடலைன்னாலும் சாகணுங்கிற நிலைமை. அழுதுகிட்டே சாப்பிடுவோம்...'' என்று மற்றொரு மீனவரான ராஜேஷ் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கண்ணில் நீர் தாரை தாரையாக ஊற்றுகிறது. தன்னை சுதாரித்துக் கொண்டு மீண்டும் பேசத் தொடங்கிய செந்தில்குமார்.

''தள்ளாடிக்கிட்டே வந்த எங்க போட்டு ஒரு வழியா கப்பல்கள் வர்ற ஏரியாவுக்கு வந்துடுச்சு... இந்த இடத்துல எங்க உயிர் காப் பாத்தப்படறதுக்கும் சான்ஸ் இருக்கு... உயிர் போறதுக்கும் சான்ஸ்

இருக்குன்ற நிலைமை..." - பீதியூட்டிய படி அவர் பேச, நமக்கு திக் திக் என்று நெஞ்சு அடித்துக்கொண்டது... அதாவது கப்பலில் செல்கிறவர்கள் ஒரு வேளை இவர்களைப் பார்க்கும் பட்சத்தில் இவர்கள் காப்பாற்றப்படலாம்... ஒருவேளை கப்பல் இருட்டு நேரத்தில் வந்தால், இவர்களுடைய போட்டின் மீது மோதவும் வாய்ப்புண்டு. இப்படிப் பட்ட இக்கட்டான சூழ்நிலையில் தத்தளித்துக் கொண்டு இருந்திருக்கின்றனர்.

"நாங்க ஆறு பேருங்கறதால மூணு பேரு முழிச்சிக்கிட்டே போட்டுக்குள்ள வந்து சேர்ற தண்ணிய மொண்டு மொண்டு கீழ ஊத்துவோம்... மத்த மூணு பேரும் தூங்குவாங்க. அப்படி முழிச்சிக்கிட்டு இருக்கறப்போதான் வீட்டு நினைப்பு வந்து பாடாய்ப் படுத்தும்... அழுதுகிட்டே தண்ணியை இறைச்சி ஊத்துவோம்... பகல் நேரத்துல ஒருத்தருக்குத் தெரியாம மற்றவர் அழுதுகிட்டு இருப்போம். அப்புறம் ஒருத்தருக்கொருத்தர் சமாதானம் சொல்லிக்குவோம்... இப்படியே நொடிக்கு நொடி அழுகையும், உயிர் பயமுமா போயிட்டு இருந்த எங்க கடல் பயணம் பங்களாதேஷ்லதான் முடிஞ்சது" என்று சதீஷ் குமாரை இடைமறித்தார் செந்தில் குமார்.

"பங்களாதேஷ் கடல் பகுதிக்குள்ள எங்க போட்டு வந்திருச்சு போல.. ஆனா எங்களுக்கு அது தெரியாது.. பக்கத்துல வந்த போட்டுல இருந்தவங்க கிட்ட கும்பிடு போட்டு, சைகை காட்டி, ஒரு வழியா கரைக்கு வந்துட்டோம். அந்த போட்டோட முதலாளி எங்களை போலீஸ்கிட்ட ஒப்படைச்சிட்டாரு. நாங்க பேசறது அவங்களுக்குப் புரியல... அவங்க பேசறது எங்களுக்குப் புரியல... திடீர்னு எங்களுக்குக் கைவிலங்கு போட்டு ஜெயிலுக்குள்ள தள்ளிட்டாங்க.... உண்மையிலேயே பெரிய அதிர்ச்சியா இருந்துச்சு. கதறினோம். கத்தினோம். ஒண்ணும் நடக்கல. இதுல இன்னொரு கொடுமை என்னன்னா, ஒரு குத்தமும் செய்யாத எங்கள 120 கொடூரமான கிரிமினல்ங்க இருக்கிற ஜெயில்ல போட்டுட்டாங்க... நரகம்ங்கறதை கேள்விப் பட்டதோட சரி... ஆனா உண்மையிலேயே நரகம்னா, அது பங்களாதேஷ் ஜெயில்தான்... அந்த 120 கிரிமினல்களும் எங்களை மனரீதியாகவும் சரி... உடல் ரீதியாவும் சரி.... படுத்தாத பாடே இல்லை... வெட்கத்தை விட்டு சொல்லணும்னா, எங்க துணியெல்லாம் உருவிட்டு, நிர்வாணமாக்கி, கத்தி வந்து சிரிப்பானுங்க. தூங்க விடாம காட்டுக் கத்தல் போடுவானுங்க... திடீர் திடீர்னு வந்து பயமுறுத்துவாங்க... ஆனா எதுக்காகவும் நாங்க கோபப் பட மாட்டோம்... ஒருவேளை நாங்க கோபப்பட்டு, அவனுங்க எங்களை அடிச்சாக்கூட கேட்க நாதி இல்லே...



"கங்கூலிய திடீர்னு மெகா சீரியல்ல நடிக்கக் கூப்பிடறாங்களாமே ஏன்?"

"எத்தனை நாளைக்குதான் கிரிக்கெட் ரசிகர்களையே அழ வச்சிக்கிட்டிருப்பாரு... கொஞ்சம் பெண்களையும் அழ வைக்கட்டும்னு தான்!"

- வே. ஆறுமுகம்

ஆனாலும் எங்களோட தலையெழுத்தை நினைச்சு அழுதுகிட்டே இருப்போம்... அப்போதைக்கு அதுதான் முடிஞ்சது" என்று சொல்லிவிட்டு கண்ணைத் துடைத்தபடி வெளியே சென்றுவிட, நம்மிடம் சதீஷ்குமார் பேச்சைத் தொடர்ந்தார்.

"ஜெயில்ல சாப்பாடுன்னு ஒண்ணு போடுவாங்க... அப்பப்பா, இப்ப நினைச்சுப் பார்த்தாலும் வாந்தி வருது... காலை ஒரேயொரு ரொட்டி... தொட்டுக்கறதுக்கு ரொட்டி மேல கிடக்குற தூசி துப்பட்டைகள்... மதியம் ரெண்டு ரொட்டி கொடுப்பாங்க... நைட்டுக்கு ஒரு தம்ளர் சாதம்... கீரைத்தண்டு குழம்பு... அதுவும் எங்க விளையற கீரைத்தண்டு தெரியுமா... அவ்ளோ பெரிய ஜெயிலோட செப்டிக் டேங்குக்கு பக்கத்துல இருக்கிற நிலத்துல... கீரைத்தண்டைப் பார்த்தவுடனே லெட்ரின்தான் ஞாபகத்துக்கு வரும். இதுல சாப்பாட்ல ஏதோ ஸ்லோபாய்ஸன் கலக்கறதா சொன்னாங்க. இதனாலயே பாதிநாளு சாப்பிட மாட்டோம். இந்தச் சாப்பாட்டையும்கூட மரியாதையா தர மாட்டாங்க. நாய்க்கு தூக்கி எறியற மாதிரி போடுவாங்க. இத்தனையும் சகிச்சிக்கிட்டு எப்படி உயிரோட இருந்தீங்கன்னு கேட்டா, ஒரே பதில்தான் எங்களால சொல்ல முடியும். நியாயமா நாங்க தற்கொலை பண்ணிக்கிட்டிருக்கணும்... ஆனா அதுக்கு எங்க யாருக்குமே தைரியம் இல்ல" - சொல்லும்போதே கண்களில் நீர் கசிகிறது.

"இந்தச் சமயத்துலதான் எங்க மேல பாஸ்போர்ட் வழக்கு போட்டாங்க.... அதாவது பாஸ்போர்ட் இல்லாம எல்லை தாண்டி வந்தது குற்றம்னு வழக்கு... அப்புறம் என்னவெல்லாமோ நடந்து, ஆண்டவன் புண்ணியத்துல ஒருவழியா தாய் நாட்டுக்கு வந்துட்டோம். இது எல்லாத்துக்கும் காரணம், நம்ம முதல்வர்னு தெரிஞ்சப்ப ரொம்ப சந்தோஷமா இருந்திச்சி... அவங்களுக்கு எங்களோட நன்றிகள். எங்களுக்கு அம்மா ஏதாவது உதவி செய்ய முடிஞ்சா, தொழில் தொடங்க வசதியாக இருக்கும்" என்று முடித்துக் கொண்டனர்.



"தலைவர் அடிக்கடி கட்சி தாவினதுல குழம்பிப் போயிருக்காரு!"
"எப்படிச் சொல்றே?"
"ரயில் விபத்து நடந்தப்போ எங்க இருந்தீங்கனு கேட்டா ஆளுங்கட்சியிலதான் இருந்தேன்கறாரு!"

- வே. ஆறுமுகம்

சதீஷ்குமார் - ராஜேஷின் பெற்றோரான எழிலரசன் - லல்லி என்ன சொல்கிறார்கள்?

"உண்மையிலே எங்க இரண்டு பசங்களும் திரும்பக் கிடைச்சது ரொம்ப ஆச்சரியமான விஷயம்ங்க... இந்த பத்து மாச காலம் மறு பிரசவம் மாதிரிதான்... இதுக்காக நாங்க போயி சந்திக்காத கட்சிக்காரங்களும் கிடையாது... ஆபீசருங்களும் கிடையாது. கும்பிடாத சாமியும் கிடையாது. எங்க பசங்களோட சேர்த்து மத்த நாலு பேரையும் மீட்டுக் கொடுத்த முதல்வரம்மா, அமைச்சர் ஜெயக்குமார் எல்லாருக்கும் எங்க நன்றிகள்!"

**- இரா. முத்துக்குமார்**

படங்கள்: **ராஜன்**

# புகையுது பிராப்ளம்!



• அமீர்கான்





• ஜெய்பால்ரெட்டி

**சு**ம்மா சும்மா எல்லா கவர் ஸ்டோரியையும் சூப்பர் ஸ்டார் ஆக்கிரமிச்சா எப்படி? பார்த்தார் புரட்சிக் கலைஞர்... இனிமே செப்டம்பர் வரைக்கும் அந்த இடத்துக்குத் துண்டு போட்டு ரிசர்வ் பண்ணாத குறையா ஒரு அறிவிப்பு செஞ்சிருக்கார்... அவங்களைச் சொல்லிக் குத்தமில்லை; அவங்க மூச்சு விட்டா கூட அதுக்கு ஒரு மீனிங் உண்டாக்கி, புண்ணியத்தைக் கட்டிக்கறது மீடியா தானே...!

விஜய்காந்த்தோட கட்சியின் பெயர் என்னவாயிருக்கும்னு கெஸ் பண்ண இன்னும் நிறைய டைம் இருக்கு... இன் தி மீன்வைல், மீடியாவை பேஜார் படுத்தற மாதிரி, ஒரு சொல் பேசியிருக்கார். மத்திய தகவல் - ஒளிபரப்பு மினிஸ்டர் ஜெய்பால் ரெட்டி. லட்சுமண ரேகையைத் தாண்டுற மீடியாவைக் கட்டுப்படுத்த, ஒரு வழிகாட்டி அமைப்பை ஏற்படுத்தப் போகுதாம் கவர்ன்மெண்ட். அதாவது சினிமாவுக்கு இருக்கற சென்ஸார் போர்ட் மாதிரி இது மீடியாவுக்கு ஒரு 'மீடியா ரெகுலேட்டரி கமிஷன்'. இதுக்குத் தனி அதிகாரங்கள். டி.வி பத்திரிகைகளில் ஆபாசம் தலை காட்டாம இருக்க, ஒரு காவல் அல்சேஷனா இது இயங்கும். ஓ.கே. எது ஆபாசம்ன்றதை இந்தக் கமிஷன், சென்ஸார் போர்ட்கிட்டே போய்க் கேட்காம இருந்தா சரிதான்!

'இப்படி ஒரு லட்சுமண ரேகை தேவையா?'ன்னு அலசி ஆராய கூட்டப்பட்ட மாநாட்டுல தான் ஜெய்பால் ரெட்டி இந்த அறிவிப்பைப் பண்ணியிருக்கார். இதே மினிஸ்டர், சில மாசங்களுக்கு முன்னால, டி.வில 'ஏ' படம் காட்ட அனுமதி தர இருக்கிறதாச் சொன்னதை சூப்பர் மார்க்கெட் ரசிகர்களுக்குத் தாழ்மையோடு ஞாபகப்படுத்திக்கறேன்.

**சா**னல் க்ளீன் அப் இயக்கத்துல ஈடுபட்டிருக்கற இன்னொரு மினிஸ்டர் டாக்டர் அன்புமணி. டி.விலயும் சினிமாக்கள்லயும் புகை பிடிக்கற மாதிரி காட்சிகள் வரவே கூடாதுன்னு தடை விதிச்சுட்டார்!

இந்த இயக்கத்தை எதிர்த்துக் குரல் கொடுக்கற ஆமிர்கானோட ஆர்க்யூமெண்டும் நியாயமா இருக்கு:

''சினிமாவில் திருடன், மோசடிக்காரன்னு கதாபாத்திரங்கள் வந்தா, திருடவும் மோசடி செய்யும் கத்துத் தர்றதுக்கா வராங்க...' கதைக்கு ஏத்த பாத்திரம். பாத்திரத்துக்கு ஏத்த பழக்க வழக்கம்... இதுல எல்லாம் கவர்ன்மெண்ட் மூக்கை நுழைச்சா ஒத்து வராது... அதுக்கு பதிலா எங்களை மாதிரி வி.ஐ.பிஸ் ஸ்மோக் பண்ணாம இருக்காங்க பாருங்க.... அவங்களை, அவங்க லைஃபை உதாரணமாக்கி சிகரெட் ஒழிப்புக்கு விளம்பரம் செய்யலாமே''ன்றார் ஆமிர்.

பாஸிடிவ் அப்ரோச்... தமிழ் நாட்டுல எத்தனை நடிகர்களுக்கு சிகரெட் ஒழிப்பு செய்திப் படத்துல நடிக்கற தகுதி இருக்கும்னு நினைக்கறீங்க...?

- சுமி






## மீண்டும் சோனியா!

எதிர்பார்த்ததைப் போலவே சோனியா காந்தி மீண்டும் காங்கிரஸ் தலைவராகியிருக்கிறார். எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிக ஆதரவுடன் அவர் அப்பதவியைத் தக்க வைத்துக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. கடந்தமுறை அவரைத் தேர்வு செய்யும்போது ஏற்பட்ட சலசலப்புகளும் கசமுசாக்களும், இம்முறை அடியோடு அடங்கிப் போய்விட்டன. பிரதமர் மன்மோகன் சிங் முதலான சக்தி வாய்ந்த அமைச்சரவை காங்கிரஸ் உறுப்பினர்கள் அத்தனை பேரும் சோனியாவின் பெயரையே முன்மொழிந்துள்ளனர்.

கடந்த நாடாளுமன்றத் தேர்தலின்போது ஷரத்பவாரின் என்.சி.பி கட்சியை காங்கிரஸ் கூட்டணிக்குள் இழுத்துச் சேர்த்தது, மாநில கட்சிகளுடன் வெற்றிகரமாக கூட்டணி அமைத்துக் கொண்டது, மதச்சார்பற்ற நடுநிலை கூட்டணியாக ஐக்கிய முற்போக்குக் கூட்டணியை வாக்காளர்களுக்கு முன்னிலைப்படுத்தியது; தேர்தல் பிரசாரத்தில் திட்டமிட்டுச் சீராக ஈடுபட்டது; அகௌரவமான விமர்சனங்களுக்கு மோசமான பதிலடிகள் தராமல், கௌரவமாக அவற்றை எதிர்கொண்டது, என்று சோனியா காந்தி தமது நேரத்தையும், சக்தியையும், சிந்தனையையும் வஞ்சனையின்றி காங்கிரஸுக்காகச் செலவிட்டார். தேர்தலில் ஜெயித்த பின்னர், பிரதமர் பதவியை ஏற்க மறுத்து, எதிர்க்கட்சிகளின் வாயை அடைத்தார்!



# கல்கி



**2005 ஜூன் 12**
பார்த்திப வைகாசி 29
மலர் : 63
இதழ் : 46

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




மக்கள் தமது கட்சிக்கு வாக்களித்தாலும், அந்நிய தேசத்தைச் சேர்ந்த தம்மைப் பிரதமராக ஏற்கத் தயங்குவார்கள் என்ற நல்லறிவு சோனியாவுக்கு இருந்திருக்கலாம். அல்லது எதிர்கட்சிகள் தமது அன்னியத் தன்மையைச் சுட்டிக்காட்ட வழியின்றிச் செய்து விட வேண்டும் என்கிற அரசியல் நோக்கு இருந்திருக்கலாம்... எவ்வாறாயினும் சோனியாவின் முடிவு நாட்டுக்கும், கூட்டணிக்கும், காங்கிரஸ் கட்சிக்கும், அதன் தலைவிக்கும் மிகுந்த நன்மையையே விளைவித்திருக்கிறது. மறுமுறையும் தலைவியாக அவர் மிகவும் சுலபமாகத் தேர்வாவதற்கு உதவியிருக்கிறது.

இந்நிலையில் காங்கிரஸ் கீதத்தில் சில அபஸ்வரங்கள் நாராசமாக ஒலிக்கின்றன:

முதலாவது: செயற்குழு உறுப்பினர்கள், நியமன முறையில் சோனியாவால் தேர்ந்தெடுக்கப்படப் போகிறார்கள் என்பது.

சோனியா காந்தியே காங்கிரஸின் நியமனத் தலைவர்தான். வேறு போட்டி நியமனங்களே இல்லாமல் தலைவியாகியிருக்கிறார். குடும்பப் பின்னணி - அந்தஸ்து காரணமாகத் தலைமையை எய்தியவர், அப்பொறுப்புக்கான தமது தகுதியை வளர்த்துக் கொண்டிருக்கிறார் என்பதும் உண்மையே. அவ்வாறு வளர்த்துக் கொண்ட பிறகாவது கட்சி செயற்/பொது குழுக்கள், இதர செயல் பொறுப்புகளுக்கு முறையான தேர்தல் நடத்த அவர் தீவிரமாக முனைய வேண்டும். ஆனால் உட்கட்சி ஜனநாயகத்தை உடைப்பிலே போட்டுவிட்டு 'நியமனத்' தலைவர்களையே உருவாக்கிக் கொண்டிருக்கிறார் சோனியா. இது காங்கிரஸின் எதிர்காலத்துக்கு நல்லதல்ல. வயிற்றெரிச்சலுக்கும் குழு மனப்பான்மைக்கும் இது வழி வகுத்து, தேர்தல் சமயத்தில் தலையைப் பிய்த்துக் கொள்ளும் அளவுக்குப் பிரச்னைகளை உருவாக்கும்.

இரண்டாவது அபஸ்வரம்: "போஃபர்ஸ் வழக்கில் ஹிந்துஜா சகோதரர்கள் பேரிலான குற்றச்சாட்டுக்கு சாட்சியங்கள் பலமாக இல்லை" என்று நீதிமன்றம் சி.பி.ஐயைக் கண்டனம் செய்து சகோதரர்களை விடுவிக்க, அதை காங்கிரஸ் தனது வெற்றியாகக்




கருதி கூப்பாடு போடுவது; குற்றம் சாட்டிய இதர கட்சிகள் மன்னிப்பு கேட்க வேண்டும் என்று அறிக்கை விடுவது...! கூட்டணி ஆதரவுக் கட்சியான சி.பி.ஐ.எம், வழக்கு ஜோடனையின் பலவீனத்தைச் சுட்டிக்காட்டி அரசு தரப்பை மேல்முறையீடு செய்யக் கோரியுள்ளது.

மூன்றாவது அபஸ்வரம்: ஜமயத் - இ - உலெய்மா - இ - ஹிந்த் என்ற இஸ்லாமிய அமைப்பு ஏற்பாடு செய்த மாநாட்டில் சோனியா காந்தி ஆற்றிய உரை. “தேசிய ஜனநாயகக் கூட்டணியின் செயல்பாடுகள் இந்தியாவின் இமேஜையே கெடுத்துவிட்டன” என்று பேசியவர், பா.ஜ.க கூட்டணியைப் போலன்றி தமது கூட்டணி இஸ்லாமியர்களுக்காகப் பாடுபடுகிறது என்று பேசியிருக்கிறார். “பொடா’ நீக்கப்பட்டதே இஸ்லாமியர்களுக்கு அதனால் விளைந்து வந்த அநீதியைக் கருதிதான்” என்றும் கூறியிருக்கிறார்! போதும் போதாததற்கு, “நீங்கள் எதிர்பார்க்கும் அளவுக்கு நாங்கள் செயல்படாமலிருக்கலாம்... ஆனால் இன்னும் முயற்சி செய்வோம்” என்று வேறு வாக்களித்திருக்கிறார்! இவை மிக அபாயகரமான வாக்கியங்கள்.

மதச்சார்பற்ற கூட்டணி என்கிற பலத்தில்தான் ஐக்கிய முற்போக்குக் கூட்டணி வெற்றி கண்டிருக்கிறது. ஜமயத் மாநாட்டில் அரசியல் ஆதாயம் தேடுவதும், பா.ஜ.கவைச் சாடுவதும் எவ்வாறு மதச் சார்பின்மையாகும்? ஜமாத் என்பது இஸ்லாமிய மதத் தொடர்புள்ள மாநாடு. அங்கே அரசியல் பேச்சு எழ வேண்டிய அவசியம் இல்லை.

பொடாவை நீக்கியது சிறுபான்மையினரின் நலன் கருதித்தான். எனில், தற்போது அமலில் உள்ள பாதுகாப்புச் சட்டம் யார் நலன் கருதி உருவாக்கப்பட்டிருக்கிறது? அல்லது யாரைச் சிக்க வைக்க உருவாக்கப்பட்டுள்ளது?!

மதச்சார்பின்மை என்ற உயர் கொள்கையை வோட்டு வங்கியில் அடகு வைத்துப் பேசியிருக்கிறார் சோனியா! இந்தப் போக்கு மாறாவிட்டால், காங்கிரஸின் இந்த பலவீனமே பா.ஜ.கவின் பலமாகிவிடும். ○

# பெருவெள்ளத்தின் படித்துறையில்...

ஆதலையூர் சூரியகுமார்

வருடக் கணக்காய் சுமந்த
வார்த்தைகளின்
பிரசவத்திற்கு
தேதி குறிக்கப்பட்டிருக்கிறது
உன்னால்.

நீல வானத் தனிமையில்
ஒற்றைப் பறவை
தவமிருக்கிறது அந்நாளுக்கென.

அன்றெனக்கு
தீர்ப்பெழுதுவாய்
உன்
இதழ் எழுதுகோல்கள் கொண்டு.
அதுவரையில் நீ
சேமித்திருக்கிற
பெருவெள்ளத்தின் படித்துறையில்
நீராடுவேன் நான்.

ஒருவேளை
ஆழ்கிணற்றில் தள்ளிவிட்டு
திரும்பிப் பார்க்காமல்
போய்விடவும் கூடும்
நீ.
எதுவெனினும்
அந்த நாளுக்குப்பிறகு
வாழ்ந்துதான்
என்னாகப் போகிறது?



# சாம்பாருடன் பீட்ஸா!

**வ**யலின் சகோதரர்கள் கணேஷ் - குமரேஷ் 'கர்நாடிக் ச்சில்ஸ்' என்று எப்போது ஆங்கிலத் தலைப்புப் போட்டு நிகழ்ச்சி அறிவித்தார்களோ, அப்போதே தெரிந்துபோய் விட்டது, இதில் கர்நாடிக் கொஞ்சமும், 'ச்சில்ஸ்' நிறையவும் இருக்குமென்று!

அதிலும் கித் பீட்டர்ஸ் பேஸ் கிடார், அருண்குமார் டிரம்ஸ், ரவிசந்தர் ஃப்ளுட், தனசேகர் தீனா கிபோர்டு என்று ஒரு டீம் மேடை ஏறியதும், ஒருவேளை இது 'கர் நாடிக் ஸ்கில்ஸ்' ஆக இருக்கலாமோ என்று தோன்றியது.

**அ**றிவிப்பாளர் நீல்கண்ட் (என்ன அழகான குரல், எத்தனை வசீகரமான ஆங்கிலம்!) அறிமுகத்தின்போதே சொல்லி விட்டார் - 'இது ஜிப்பாவுடன் அணிகிற ஜீன்ஸ் மாதிரி; இட்லி - சாம்பாருடன் சாப்பிடுகிற பீட்ஸா மாதிரி' என்று. அப்புறம் ஏது அதிர்ச்சி?

முதலில் 'ஃப்ளைட் ஆஃப் ஃபான்டஸி' - நாட்டை ராகச்சாயம் பூசிக் கொண்டு வெளிப்பட்டது. 'டான்ஸ் லைக் எ மேன்' திரைப்படத்துக்கு கணேஷ் - குமரேஷ் அமைத்த இசை இது.

அடுத்தது ஜாய் - மோகனஸ்ரீ ராகம் அங்கங்கே எட்டி எட்டிப் பார்த்து மறைந்தது.

கங்கை அமரனின் கடவுள் வாழ்த்தில் கணேஷின் கேதார கௌளை ஆலாபனை, உருக்கம் தந்தது. கணேஷ் பாடிய பிறகு, குமரேஷ் வாசித்தார், அதிகபட்ச டெசிபலில் டிரம்ஸ், கிபோர்டு, மோர்சிங், ஃப்ளுட் தொடர.

அடுத்து 'ஃபயர் அன்ட் வாட்டர்' பந்துவராளி ராகம் பயந்து பயந்து தலைகாட்டியது. ஆனால் கித் பீட்டர்ஸின் கிடார் பீஸ் முடிந்து, ரவிசந்தர் வாசித்த ஃப்ளுட் பிட் இருக்கிறதே, இப்படிக்கூட புல்லாங்குழலில் வாசிக்க முடியுமா என்று அசர வைத்தது. அதற்கு அப்படி ஓர் அப்ளாஸ்! அருண்குமார் டிரம்ஸ் மட்டுமல்ல, மோர்சிங்கிலும் வித்தைகள் காட்டினார்.

அப்புறம் கொஞ்சம் 'சாமஜ வர கமனா'வை ஆதாரமாக வைத்து ஒரு சின்ன ஹிந்தோளம்.

கடைசியாக, கரஹரப்ரியாவில் 'கர் நாடிக் ச்சில்ஸ்! சகோதரர்கள் வாசித்த ஆலாபனை அசர வைக்கிற ரகம். கொத்துக் கொத்தாக அப்ளாஸ்கள்.

"**க**ர்நாடக இசையை ரசிக்க ராகங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்று அவசியமில்லை. தெரியாமலேகூட ரசிக்கலாம் என்ற நோக்கத்தில்தான் இந்த மாதிரி நிகழ்ச்சியை வழங்கினோம்!" என்றார் கணேஷ், நம்மிடம். பாராட்ட வேண்டிய முயற்சி. நிறைய இளைஞர் கூட்டம் ரசித்து மகிழ்ந்தது உண்மை.

**- விச்சு**



* கணேஷ் - குமரேஷ்

# பூரி பிடிக்காமல் இருக்குமா?



• நூற்றாண்டு விழா மேடையில்...



• கி.வா.ஜகன்னாதன்

இலக்கிய விழாவுக்குக் கூட இத்தனை பேர் வருவார்களா என்று வியக்க வைக்கிற மாதிரி, அப்படி ஒரு கூட்டம்.

அல்லயன்ஸ் பதிப்பகம் ஏற்பாடு செய்திருந்த கி.வா.ஜ.வின் நூற்றாண்டு விழாவுக்கு!

'கலைமகள்' மாத இதழ் சார்பில் வழங்கப்பட்ட, மராத்தி ஓவியர் பராஸ்கர் வரைந்த கி.வா.ஜ.வின் படத்தைத் திறந்து வைத்துப் பேசினார் கமலாத்மானந்தர்.

''கம்பரையும், திருவள்ளுவரையும் நாம் நேரில் பார்த்ததில்லை. ஆனால் கி.வா.ஜ.வைப் பார்த்தால், அவர்கள் எப்படி இருந்திருப்பார்கள் என்று புரியும். எளிமையாக, அடக்கமாக, தமிழுக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார் கி.வா.ஜ. சுமார் 150 நூல்களை எழுதியிருக்கிறார் அவர். சைவத் திருமுறைகள் 12க்கும் விளக்கவுரை எழுதியிருக்கிறார். 'திருமுறை மலர்கள்' என்று அவர் எழுதிய பிறகுதான், எங்களைப் போன்றவர்களுக்கு அவற்றைப் படிக்கிற ஆர்வம் ஏற்பட்டது. 'அபிராமி அந்தாதி' இன்று இத்தனை பிரபலமாக இருப்பதற்குக் காரணம் கி.வா.ஜதான்'' என்று புகழ்ந்தார்.

''கி.வா.ஜ.வின் சிலேடையையும், நகைச்சுவையையும் விட்டுவிட முடியுமா? ஒரு வீட்டில், காலைச் சிற்றுண்டிக்கு பூரி செய்யப்பட்டிருந்தது. ''உங்களுக்கு பூரி பிடிக்குமா?'' என்று வீட்டுக்கார அம்மாள் கேட்டாளாம். ''ஜகன்னாதனுக்கு பூரி பிடிக்காமல் இருக்குமா?'' என்று கேட்டுச் சிரிக்க வைத்தாராம் கி.வா.ஜ.''

அவருடைய பலதுறைச் சிறப்புக்களை அடுக்கிக் கொண்டே போனார், அவ்வை நடராசன்.

கி.வா.ஜ. கலந்து கொண்ட கூட்டத்தில் தாமும் கலந்து கொண்டபோது, 'ட்விங்க்கிள் ட்விங்க்கிள் லிட்டில் ஸ்டார்; அவ்வை, ஐ வொண்டர் வாட் யு ஆர்!' என்று சிரித்துப் பேசியதை அவையோர் கைத்தட்டலுக்கிடையே வெளியிட்டார் அவ்வை.

ஜெயகாந்தன் பேச்சு கடைசிப் பேச்சு.

''1956ல் தமிழ் எழுத்தாளர் சங்க மாநாடு நடந்தது. அப்போது எனக்கு 22 வயது. நான் 'சரஸ்வதி'யில் எழுதிக் கொண்டிருந்தேன். அப்போது கி.வா.ஜ. ''சிறந்த எழுத்தாளர்கள் எல்லாம் 'கலைமகளில்' எழுதுவதைத்தான் விரும்புகிறார்கள்'' என்றார். '''கலைமகளில் எழுதாமலே சிறந்த எழுத்தாளனாக நான் முயற்சி செய்வேன்!'' என்று சொன்னேன், வம்புக்காக. ஆனால் அந்த இலக்கிய வம்புகள் எவ்வளவு நன்றாக இருக்கும்! அந்த வருடம் கலைமகள் தீபாவளி மலருக்குக் கதை கேட்டு கி.வா.ஜ கடிதம் எழுதியிருந்தார்: 'நீங்கள் என்ன சொன்னீர்களோ, அதைச் சாதித்து விட்டீர்கள். இனி 'கலைமகளுக்கு எழுதலாமே?' அதுதான் தமிழுள்ளம்; பேருள்ளம்'' என்றார் ஜெயகாந்தன்.

- சித்தார்த்



பரீட்சை எழுதிவிட்டுக் காத்திருக்கும் மாணவனைப் போன்ற எந்தப் பதற்றமும் இல்லை ஷங்கரிடம். மாறாக அந்நியன் வெளியீட்டுக்குத் தயாராகிவிட்ட சந்தோஷம் இழையோட ரிலாக்ஸாகப் பேசினார்.

**அந்நியன் இன்னொரு இந்தியனா?**

நிச்சயமாக இல்லை. செய்த கதையையே திரும்பவும் பண்ணுவதில் எந்த த்ரில்லும் கிடையாது. இந்தியன் இரண்டாம் பாகம் எடுக்கலாமா என்று கமல் சார் கேட்டார். நான் இப்போது பண்ணவேண்டாம் என்றேன். இந்தியன் படம் வெளியானபோது, இந்தியன் தாத்தா சர்ப்ரைஸான கேரக்டர். இப்போது அவரை எல்லோருக்கும் தெரியும். லஞ்சத்துக்கு எதிராகப் போராடுவார் என்று தெரியும். சுவாரஸ்யமான, சரியான, கதைக்களம் அமையும்போது, பார்ட் டூ செய்யலாம் என்று முடிவு செய்தோம். இந்தியனுடைய சிறு பாதிப்பு கூட அந்நியனில் இருக்காது.



**அநீதியை எதிர்த்துப் போராடுகிறவன் என்ற கோணத்தில் பார்த்தால், இந்தியன் தாத்தாவுக்கு அந்நியன் பேரன் மாதிரிதானே?**




புராணங்களில் ஆரம்பித்து, இன்றைய சினிமாக்கள் வரை, எல்லாக் கதைகளிலும் அநீதியை எதிர்த்துப் போராடுவதுதான் மையப்புள்ளியாக இருக்கும். தர்மத்தின் வாழ்வுதனை சூது

# "அடுத்த இலக்கு ஹாலிவுட்!"

## மனம் திறக்கிறார் இயக்குனர் ஷங்கர்

கவ்வும், தர்மம் மறுபடி வெல்லும் என்ற கோட்பாட்டின்படி எல்லாக் கதைகளும் ஒன்றுதான். இப்படி வேண்டுமானால் அந்நியனையும் இந்தியனையும் பொதுமைப்படுத்தலாம்.

'அந்நியன்' இந்த சமூகத்தைச்



சேர்ந்தவன் தானா?

நிச்சயமாக அவன் ரோபோ அல்ல. வேற்றுக்கிரகவாசியும் கிடையாது. ரத்தமும் சதையுமான சராசரி மனிதன். அவனது உணர்வுகளை இந்தச் சமூகம் உரசிப் பார்க்கிறது. அவன் தீக்குச்சி போலப் பற்றிக் கொள்கிறான். இன்னும் கொஞ்சம் விரிவாகச் சொல்வதென்றால்... நம்மைப் போன்ற சராசரி மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் கோபம் உண்டு, ஏக்கம் உண்டு, கனவுகள், ஆசைகள், இயலாமை என்று நிறைய உணர்வுகள். இவற்றையெல்லாம் 'அந்நியன்' பாத்திரத்துக்குள் நிரப்பியிருக்கிறேன். அந்நியனை ஒரு ஃபிக்ஷன் த்ரில்லர் என்று சொல்லலாம்.

**அந்நியனாக விக்ரமைத் தேர்வு செய்ய விசேஷக் காரணங்கள் உண்டா?**

சில கதைகளை யோசிக்கும்போதே இந்தக் கேரக்டரை இவர் செய்தால் தான் சரியாக இருக்கும் எனப் பளிச்சென்று தோன்றும். அந்நியன் கதைக்கான கரு உருவானபோது, விக்ரம்தான் நினைவுக்கு வந்தார். கூப்பிட்டுப் பேசினேன். அவரும் ஆர்வத்தோடு ஒப்புக் கொண்டார்.

**உங்கள் எதிர்பார்ப்பையும் நம்பிக்கையையும் விக்ரம் காப்பாற்றினாரா?**

நிச்சயமாக... அந்நியன் கேரக்டருக்காக உடல் மாற்றங்கள், உருவமாற்றங்கள், செய்ய வேண்டி இருந்ததால், இந்தப் படம் முடிகிறவரை, வேறு படங்களில் அவர் நடிக்காமல் இருக்க வேண்டிய கட்டாயம். ஒரு முன்னணி ஹீரோவை நீண்ட நாள் பூட்டி வைக்கக் கூடாது என்பதால் எடிட்டிங் கூடச் செய்யாமல்,



தொடர்ந்து படப்பிடிப்பை மட்டும் நடத்தி முடித்து விட்டு அவரை அனுப்பினோம். ஜனவரி மாதமே அவருக்கு விடுதலை கொடுத்து விட்டோம். இரண்டு படங்களில் நடிக்கிற கால அவகாசத்தை அவர் அந்நியனுக்குச் செலவிட்டிருந்தாலும், இரண்டு படங்களின் வழியே கிடைக்கிற பலன், இந்த ஒரு படத்தின் மூலமே அவருக்குக் கிடைத்து

விடும்.

**எப்போதும் நீங்கள் எடுத்துக் கொள்ளும் கால அவகாசத்தை விட இந்தமுறை கொஞ்சம் அதிகமாகிவிட்டதே ஏன்?**

புதுப்புதுத் தேடல்களில் ஈடுபடுவது ஒரு காரணம். விக்ரம் நீளமாக முடிவளர்த்தாக வேண்டும். தலைமுடி எப்போதும் வளர்கிற வேகத்துக்குத்தான் வளரும். முடி வளரட்டும் என்று காத்திருந்தேன். பிறகு சென்னையில் எடுக்க வேண்டிய பல காட்சிகளுக்கு கடைசி நேரத்தில் அனுமதி கிடைக்கவில்லை. எனது கதைக்களம் பெரும்பாலும் மக்கள் கூடும் இடங்களில்தான் இருக்கும். சென்னையில் மௌண்ட் ரோடு, எக்மோர் போன்ற இடங்களில் எடுக்க வேண்டிய காட்சிகளையெல்லாம் மும்பையில் போய் எடுத்தேன். சென்னையில் படம் பிடிக்க அனுமதி இல்லை என்று கடைசி நேரத்தில்தான் தெரிகிறது. இதனால் மொத்த டீமையும் கூட்டிக் கொண்டு மும்பைக்குச் செல்வது, கால விரயம் மட்டுமல்ல, தயாரிப்பாளருக்கு பணவிரயம். தேனாம்பேட்டையில் எடுக்க வேண்டியதை பலமடங்கு செலவு செய்து மும்பையில் எடுத்திருந்தாலும் அந்தச் செலவு படத்தில் தெரியாது.




அடுத்து பாடல் காட்சிகள்... ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு படத்துக்குண்டான உழைப்பைக் கொட்ட வேண்டியிருக்கிறது. ஏனென்றால், ஏற்கெனவே ஷங்கர் படத்தில் பாடல்களை ரசிக்கலாம் என்ற மக்களின் எதிர்பார்ப்பை மதிக்க வேண்டிய கட்டாயம். பாடல்களுக்கே நாற்பத்தைந்து நாள் படப்பிடிப்பு.

கடைசியாக கம்ப்யூட்டர் கிராபிக்ஸ். இப்போது இங்கேயே நிறைய கிராபிக்ஸ் கம்பெனிகள் வந்துவிட்டன. சரி இங்கே செய்யலாம் என்று இறங்கினால், நான் எதிர்பார்த்த பர்ஃபெக்ஷனைக் கொண்டு வருவதற்குள் முதுகொடிந்துவிட்டது. இப்படிப் பல கூட்டுக் காரணங்கள்.

**அந்நியனுக்கென்று நிறைய அந்நியத் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தியிருக்கிறீர்களா?**

தொழில் நுட்பத்தின் வளர்ச்சி பெரியது. தொழில் நுட்பத்தைக் கொண்டு வந்து நிரம்ப படமெடுக்க வேண்டும் என்று நினைத்தால், கதையை வதை செய்த மாதிரி ஆகிவிடும். அந்தந்தக் கதைக்கு என்ன தொழில் நுட்பம் தேவையோ அதை மட்டுமே பயன்படுத்தி வந்திருக்கிறேன். இந்தப் படத்தில் டைம் ஃப்ரீஸ் தொழில் நுட்பம், பாதிப் படம் முழுவதும் த்ரீ-டி கேரக்டர் அனிமேஷன் இரண்டுக்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறேன்.

**ரகுமானுக்கும் உங்களுக்கும் என்ன ஊடல்?**

ஊடலோ, கோபமோ எதுவுமில்லை. அவர் சென்னையில் கிடைப்பது அரிதாகிவிட்டது. தமிழ்ப் படங்களுக்கு இசையமைக்கும் போதே போதிய கால அவகாசம் எடுத்துக் கொள்வதுதான் அவருடைய ஒர்க்கிங் ஸ்டைல். அவர் ஹிந்திப் படங்களுக்கு இசையமைக்க ஆரம்பித்த பிறகு, தமிழுக்குப் பணி புரிவது குறைந்து போனது. பிறகு 'பாம்பே ட்ரீம்ஸ்' ஆங்கில நாடகத்துக்கு இசையமைக்க லண்டனுக்குப் போய் வந்த பிறகு அவருடைய எல்லைகளும் தேவை



களும் விரிந்து விட்டன. இப்போது ஹாலிவுட் படங்களுக்கு இசையமைத்து வருகிறார். ஒரு தமிழரின் வளர்ச்சியைப் பார்த்து நாம் பெருமைப்பட வேண்டும். அவரை இங்கேயே அடைத்து வைப்பது அவரது வளர்ச்சிக்கு நாம் போடும் முட்டுக் கட்டை.

**ஹாரீஸ் ஜெயராஜ் எப்படி?**

ரசிகர்களைத் திருப்திப்படுத்த வேண்டும் என்று நினைப்பவன் நான். அவரும் அப்படித்தான். அந்த வகையில் எங்கள் அலை வரிசை சரியாக அமைந்து விட்டது.

**உங்களுக்கு வார்னர் பிரதர்ஸ் ஸ்டுடியோவிலிருந்து அழைப்பு வந்ததாமே!**

ஆமாம்! ஜீன்ஸ் படப்பிடிப்பை நாற்பத்தைந்து நாட்கள் அமெரிக்காவில் நடத்திக் கொண்டிருந்தபோது கதை கேட்டார்கள். அப்போது சேகர் கபூர் போன்ற இந்திய இயக்குனர்கள் பற்றி அங்கேயொரு கெமிஸ்ட்ரி உருவாகியிருந்தது. ஜீன்ஸ் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த நேரத்தில், இந்தியன் படம், வெளிநாட்டு மொழிப் படமாக இந்தியாவிலிருந்து அதிகாரபூர்வமாக ஆஸ்காருக்குத் தேர்வாகி வந்திருந்தது. அதைக் கேள்விப்பட்டு ஹாலிவுட்டிலிருந்து நிறையப் பேர் வந்து பாராட்டி விட்டுப் போனார்கள். அந்த நேரத்தில் தான் கதை கேட்டார்கள். சந்திரமண்டலத்துக்குப் போக வாய்ப்பு கிடைத்தாலும் அந்த நேரத்தில் போயிருக்க மாட்டேன்.

**நல்ல வாய்ப்பு கை நழுவி விட்டதே என்று வருந்தினீர்களா?**

நான் அப்படி நினைக்கவில்லை. ஹாலிவுட் மாதிரி இங்கே பண வசதி இருந்தால், அவர்களை விட நம்மால் நல்ல படம் தர முடியும். இங்கே மூளை உழைப்பும்; உடல் உழைப்பும் அதிகம். நமது படைப்பாளிகள், தொழில் நுட்பக் கலைஞர்கள் மிகச் சிறந்த திறமைசாலிகள் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. இந்த வசதிகளை வைத்துக் கொண்டே இந்த அளவு பண்ணும்போது, ஹாலிவுட்டை விட நாம் பெட்டர் என்று தைரியமாக மார்தட்டிக் கொள்ளலாம்.

**ஷங்கர் - ரஜினி இணைவதில் என்ன சிக்கல்?**

அவருக்கென்று ஒரு ரசிகர் வட்டம் உண்டு. என்னிடம் ரசிகர்கள் எதிர்பார்ப்பது வேறு. அவரால் சில விஷயங்களிலிருந்து விலகி வர முடியாது. நான் எடுத்துக் கொள்ளும் கால அவகாசம் அதிகம். அவர் ஒரு குறிப்பிட்ட டெட்லைனில் படங்கள் எடுத்து ரிலீஸ் செய்ய நினைப்பவர். கதை, பட்ஜெட், கால அவகாசம், எதிர்பார்ப்பு இப்படிப் பல விஷயங்களில் இரண்டுபேருமே எதிர் எதிர் முனைகளில் நின்று கொண்டிருக்கிறோம். இணைந்து பணி புரியும் எண்ணம் இருக்கிறது. பார்க்கலாம்.

பேட்டி: **ஜெய்**

படங்கள்: **புதூர் சரவணன்**

# சிறுகதை

நான் என் வண்டியை நிறுத்தி விட்டுத் திரும்ப, அவன் எப்போதும் போல் என்னை நெருங்கி, விறைப்பாய் ஒரு சல்யூட் வைத்தான்.

காரணமில்லாமல் அனிச்சையாய் என் தலை கவிழ்ந்துகொண்டது. இனம் புரியாத குற்றவுணர்ச்சி மனதினுள் நிரம்ப, கொஞ்சமும் நிமிர்ந்து பார்க்காமல் விறு விறுவென்று உள்ளே நடந்தேன்.

இந்த ஹோட்டலில் சாப்பிடத் துவங்கிய நாள்முதலாகவே. இது அன்றாட நடவடிக்கையாகிவிட்டது - வண்டி நிறுத்துமிடத்தில் அந்த அவன் எனக்கு வணக்கம் போடுவதும், பதிலுக்குக் காசு எதிர்பார்ப்பதும், அதைத் தரமுடியாது என்று நான் பிடிவாதமாயிருப்பதும்!

இத்தனைக்கும், இந்த ஹோட்டலில் வண்டி நிறுத்துவதற்குக் கட்டணம் ஏதும் கிடையாது - அதைத் தெளிவாக வாசல் பலகையில் எழுதிப்போட்டிருக்கிறார்கள். என்றாலும், இந்த ஆள் எல்லோரிடமும் வணக்கம் போட்டுக் காசு வசூலித்துக் கொண்டிருக்கிறான்! அநேகமாய், நான் ஒருவன்தான் அவனுக்குக் காசு தராமல் புரட்சி செய்து கொண்டிருப்பது.

அது புரட்சியா அல்லது வீம்பா, அல்லது கஞ்சத்தனமா அல்லது ஏழையை அலட்சியப்படுத்தும் பணக்காரத் திமிரா



என்.சொக்கன்

# சல்யூட்

என்றெல்லாம் எனக்குத் தெரியாது - வெறும் சல்யூட்டுக்காக அவனுக்குக் காசு தர வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. அவ்வளவே.

பொதுவாக, இரு சக்கர வாகனங்களை நிறுத்துவதற்கான இடங்களில் அதற்கென்றே சில பணியாளர்களோ, ஆர்வலர்களோ இருப்பது வழக்கம்தான். ஆனால், அவர்கள் இவனைப் போல் சும்மா நின்றிருக்க மாட்டார்கள் - நீளமாய்த் தொடரும் வரிசையில், நமது வண்டியை நிறுத்துவதற்கான வெற்றிடங்கள் எங்குள்ளன என்று சரியாக துப்புத் தருவார்கள். நாம் வண்டியை நிறுத்த முயற்சி செய்யும்போது பக்கத்திலிருக்கும் வாகனங்களை நகர்த்தி, நமக்கு வழி செய்து தருவார்கள். மீண்டும் வெளியே எடுக்கும்போதும் இப்படி உதவுவார்கள்.

இப்படிச் செய்கிறவர்களுக்கெல்லாம் மறு பேச்சில்லாமல் (அதுவும் தாராளமாகவே) காசு கொடுக்கிற பழக்கம் எனக்கு உண்டு - பெருநகரங்களில் இது போன்ற சிறு உதவிகளும் ஞாலத்தின் மாணப் பெரியவைதான்!

ஆனால், இந்த ஆள், இப்படி எந்த உதவியும் எனக்குச் செய்வதில்லை - நானாக இடம் தேடி வண்டியை நிறுத்துகிறேன். வரிசை மிகவும் நெருக்கமாய் அடர்ந்திருக்கும்போது கையில், காலில் பிற வாகனங்களின் கம்பிகளும் தூசும் சிராய்க்க, நானாகவே சிரமப்பட்டு வண்டியை உள் நுழைக்கிறேன். வெளியிலெடுக்கிறேன்.

வண்டியை நிறுத்திய மறுகணம், எப்படித்தான் மூக்கில் வியர்க்கிறதோ, இவன் வந்து சல்யூட் அடிக்கிறான் - அதேபோல், வண்டியை வெளியிலெடுக்கும் போதும். எங்கிருந்தோ சட்டென்று பிரத்யட்சமாகி, இன்னொரு சல்யூட் வைக்கிறான்.

இந்த இரண்டு சல்யூட்களுக்காக, நான் இவனுக்குக் காசு தரவேண்டுமா? இது நல்ல கதையாய் இருக்கிறதே!

யார் இவன்? ஏன் இப்படி கௌரவப் பிச்சை எடுக்கிறான்? இந்தக் கேள்விகள்தான் சில மாதங்களாய் என்னை என்னவோ செய்து கொண்டிருக்கின்றன.

ஒரு வேளை, ஓய்வு பெற்ற ராணுவச் சிப்பாயாக



இருப்பானோ? அப்படியானால் அவனுக்குப் பென்ஷனெல்லாம் வருமே. அதை வைத்துக் குடும்பத்தைக் காப்பாற்ற முடியாதா? ஏன் இப்படிக் கையேந்த வேண்டும்?

என்ன காரணமோ, இப்படிப் பரிதாபமாய்க் கையேந்துகிறான். அவனுக்குக் காசு போட்டுத் தொலைப்பதில் எனக்கென்ன நஷ்டம்? மாதம் ஆயிரக்கணக்கில் சம் பாதிக்கிறவன். இந்த ஒற்றை ரூபாயிலா சொத்தைத் தொலைத்து விடப் போகிறேன்?

இப்படி இரண்டு பக்கமும் நியாயமிருப்பதாக வாதிடுகிற புத்தியின் கேள்விகளால்தான், அவனைத் தவிர்க்கவும் முடியாமல், ஆதரிக்கவும் மனமில்லாமல் தடுமாறுகிறேன்.

பல நாள்கள், வண்டியை வெளியிலெடுக்கும்போது அவனுடைய நேர்த்தியான சல்யூட்டில் தெறிக்கும் நேர்மையான மரியாதையைப் பார்க்கும்போது, அவனுக்குக் காசு தந்துவிட வேண்டும் என்று தோன்றும். ஆனால், அந்தக் குறுகுறுப்பை மறுத்து, வேண்டுமென்றே பைக்கை வேகமாய் உதைத்துக் கிளப்பி, வெளியேறிவிடுகிறேன்.

சிறிது தூரம் சாலையில் பயணித்த பின், திடீரென்று மனம் சுருங்கிப் போகும். பாவம்! இல்லாதவன், கேட்கிறான். இருப்பவன் கொடுப்பதுதானே நியாயம்? இப்படி நினைக்கையில், அவனுடைய ஒற்றை ரூபாயை நான் திருடிக் கொண்டுவிட்டதுபோல் கூசிப் போகிறேன்.

ஆனால், அந்த ஒரு ரூபாய் சில்லறையை அவனுக்கு 'சும்மா'க் கொடுத்துவிடவும் நான் விரும்பவில்லை. அதுதான் பிரச்னை. அதற்குரிய எதையும் அவன் எனக்குச் செய்துவிடவில்லை என்று இன்னொரு பக்கம் உறுத்திக் கொண்டேயிருகிறது. ஏற்கெனவே சோம்பேறிகளால் நிறைந்திருக்கிற நம் தேசத்தில், வெறும் சல்யூட்களுக்குக் காசா? அப்படிக் கொடுத்து அவனை ஊக்குவிப்பது நியாயம்தானா?

அப்படியானால், நான் அவனுடைய வணக்கத்தையும், மரியாதையையும் ஒரு மறைமுக கர்வத்துடன் ஏற்றுக் கொள்வது மட்டும் நியாயத்தில் சேர்த்தியா?

பதிலில்லாத இந்தத் தொடர் கேள்விகள் என்னைக் குத்திக் கிழித்துக் கொண்டிருக்க, பர்ஸை எடுப்பதா, வேண்டாமா என்று மனம் ஊசலாடித் தளர்கிறது.

பல மாதங்களாய்த் தொடர்ந்து கொண்டிருந்த இந்தப் பிரச்னைக்கு சென்ற வாரத்தின் ஓர் உற்சாகமான காலைப் பொழுதில் தீர்வு கண்டேன். எனது குற்றவுணர்ச்சியை அதிகப்படுத்தி விடாத, இரு பக்கமும் சம அளவு நீதி தரும் ஒரு தீர்வு.

பெரிதாய் ஒன்றுமில்லை. இப்போதெல்லாம், அவன் எனக்கு சல்யூட் வைக்கும்போது, நானும் அதே அளவு மரியாதையுடன், விறைப்பாக அவனுக்கொரு பதில் சல்யூட் வைத்து விடுகிறேன். ○

''சே... யார் வீட்டுக்குப் போனாலும் அவங்க வீட்டு போட்டோ ஆல்பத்தைக் கைல குடுத்து போரடிக்கறாங்க.''

''அதுவாவது பரவாயில்லை. நோயாளி நண்பரைப் பார்க்கப் போன இடத்துல, அவரோட எக்ஸ்ரே ஆல்பத்தையும், ஈ.ஸி.ஜி. ஆல்பத்தையும் கைல குடுத்துட்டார்.''

- எம்.ஆர். மூர்த்தி





# அருள்வாக்கு

இரண்டு கட்சிக்காரர்களின் இழுப்புக்கு நடுவே ஜனங்கள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சாஸ்திரங்களின் வழியிலேயே போக வேண்டும் என்று சொல்கிற நாங்கள் ஒரு பக்கம் இழுக்கிறோம்; சாஸ்திரங்களை மாற்ற வேண்டும் என்கிற 'சீர்திருத்தக்காரர்கள்' இன்னொரு பக்கம் இழுக்கிறார்கள். நவீனப் படிப்பு முறை காரணமாகச் சிறு பிராயத்திலிருந்தே சீர்திருத்தங்கள் எனப்படும் மாறுதல்களைச் சிலாகித்துத்தான் ஜனங்கள் படித்திருக்கிறார்கள். படிப்பு இப்படி இருந்தாலும், பழக்கம் அடியோடு போகவில்லை. யுகாந்தரமாக வந்துள்ள நமது சாஸ்திர தர்மங்கள் துளித்துளி எல்லார் வீட்டிலும், சமூகத்திலும் பழக்கத்தில் இருக்கத்தான் செய்கிறது. அந்தப் பழக்க வாசனை ஒரு பக்கமும், நவீனப் படிப்பு வாசனை எதிர்ப்பக்கமும் ஜனங்களை இழுக்கின்றன. இப்போது ஏற்படுத்திக் கொண்ட நாகரிக வாழ்க்கையில் திருப்தி இல்லை என்று எல்லாருக்கும் தெரிகிறது. பழைய காலத்தில் இருந்த நிம்மதி இன்று இல்லை என்று அனைவருக்கும் சர்வ நிச்சயமாகத் தெரிகிறது. இப்போது முன்னைவிட அதிகப் பணம் இருப்பதாக பாவனை இருந்தாலும், தரித்திரம் போகவில்லை என்று நன்றாகத் தெரிகிறது. 'எல்லாம் சுபிட்சமாயிருக்கிறது; நம் தேவைக்கு அதிகமாகவே தானியம் விளைந்திருக்கிறது' என்றெல்லாம் சொல்லப்பட்டாலும் எங்கே பார்த்தாலும் திகில் போகவில்லை.

இவையெல்லாம் நாகரிக வாழ்க்கையில் வந்தவைதான். ஆனாலும் அன்று இருந்த நிம்மதி இன்று இல்லவே இல்லை என்று தோன்றுகிறது.

சாஸ்திரப் பிரகாரம் நடப்பது இந்தக் காலத்தில் சாத்தியமே இல்லை என்று நினைத்து விடக் கூடாது. வியாபார வேகத்தில் வளர்ந்து விட்ட லௌகிக நாகரிகத்தை விட்டு விட்டு, தேவைகளைக் குறைத்துக் கொண்டால், யாருமே இப்படி ஆசாரங்களை விட்டுப் பணத்துக்காகப் பறக்க வேண்டியதில்லை. பணத்துக்காகப் பறக்காதபோது பகவத் ஸ்மரணத்துக்கு நிறைய அவகாசம் கிடைக்கும்; வாழ்க்கையில் நிம்மதியும், திருப்தியும், சௌக்கியமும் தன்னால் உண்டாகும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

# ஓவர் அன்புத் தொல்லை!

"உஸ்.... அப்பா! வெளியே தலை காட்ட முடியலை" என்று ஏகத்துக்கும் சலித்துக் கொண்டார் சினேகா நம்பியார்.

"ஆமாமா... கத்திரி வெயில் கொஞ்சமாவா காயுது" என்று கர்ச்சிப்பை நீட்டினால்,

"ஐயோடா! நான் அதைச் சொல்லலைங்க. டி.வி விசிறிகள் தொல்லையைச் சொன்னேன். சூப்பர் மார்க்கெட், வாக்கிங், ஹோட்டல்னு எங்க போனாலும் 'கோலங்கள்' ரஞ்சனி கேரக்டர் பத்திதான் பேசறாங்க. "ஏற்கெனவே கல்யாணமானவரை கல்யாணம் பண்ணிக்கிட்டு, அந்தப் பொண்ணோட வாழ்க்கையைக் கெடுக்காதே"ன்னு அட்வைஸ் பண்றாங்க.

"அபியும் பாஸ்கரும் சேருவாங்களா?"ன்னு ஆர்வமா கேட்டுக்கறாங்க. அன்புத் தொல்லை கொஞ்சம் ஓவர்தான்" என்றார் பெரும் மகிழ்ச்சியுடன்.

சந்திரமுகியின் முன்னோடி ஜெராக்ஸான கன்னட ஆப்த மித்ராவுல மாளவிகா ரோலை செய்திருக்கிறார் சினேகா!



"பெங்களூர்தான் சொந்த ஊர். நிறைய கன்னடப் படங்கள், டி.வி சீரியல்கள் செய்திருக்கேன். இப்ப சென்னையில டென்ட் போட்டாச்சு. அகல்யா, கோலங்கள், கல்கி, மனைவின்னு நிறைய நடிச்சுட்டேன். நல்ல பேனரா, நல்ல காரெக்டரா பார்த்து தேர்ந்தெடுத்து நடிக்கிறேன். என்னுடைய விருப்பத்திற்கு எங்க வீட்டுல யாரும் குறுக்கே நிற்கறதில்லே" என்றார்.

இன்னொரு விஷயம். சிநேகாவுக்கு நன்றாகக் கார் ஓட்டத் தெரியுமாம். சமயம் கிடைக்கும் போதெல்லாம் கறுப்புநிற சான்ட்ரோவை எடுத்துக் கொண்டு சுற்று வாராம். தயவு செய்து குறுக்கே நின்னுடாதீங்க!

- டாலி



# நடிப்பு ச்சும்மா!



'தென்றல்' படத்தில் "அடித்தோழி அடித்தோழி அடைகாக்கும் சிறு கோழி" என்று நாட்டுக் கோழி முட்டையை உருட்டி உருட்டி கண்களாலேயே கவிபாடிய சிறுபெண்ணை ஞாபகமிருக்கிறதா? பத்தாவது வகுப்புக்குள் நுழைந்திருக்கும் ரஞ்சனியை சந்தித்து "என்ன தமிழ் சினிமாவுக்குத் தயாராகி வருகிறீர்களா?" என்று கேட்டதுதான் தாமதம் ஆதி முதல் அந்தம் வரை வாசித்து விட்டார்.

"அமாவாசைக்கும் அப்துல் காதருக்கும் உள்ள சம்பந்தம்தான் எனக்கும் சினிமாவுக்குமானது. நான் படமே பார்க்க மாட்டேன். தமிழ்க் கலைகள் மீது ஆர்வம் இருக்கிறதால பரதமும் பாட்டும் படிப்புக்கிடையில கத்துகிட்டிருக்கேன்.

"எப்பொழுதும் என் கூந்தல் தரைதொடும். ஒரு நாள் கலைஞர் முன்னிலையில் வள்ளுவர் கோட்டத்தில் ஒரு நடன நிகழ்ச்சி பண்ணியபோது என் கூந்த லழகில் மயங்கிப் போன ஒருவர் நேரா வீட்டுக்கு போன் பண்ணி "கூந்தல் தைலம் விளம்பரத்துக்கு மாடலா நடிக்க முடியுமா?"ன்னு கேட்டார். அன்னைக்கு என் வாழ்க்கை திசை திரும்புச்சு.

"என் புகைப்படங்களைப் பார்த்த இயக்குனர் காந்திகிருஷ்ணா, தேசிய விருது வாங்கின 'நிலாக்காலம்' படத்துல மெயின் ரோல் கொடுத்தாரு. 'அழகி' படத்துல குட்டி நந்திதாதாஸா நடிக்க வைக்க தங்கர் பச்சான் ரொம்ப விரும்பினாரு. ஏன்னா நந்திதாதாஸ் மாதிரியே எனக்கும் அழகான தெற்றுப்பல் இருக்கறதுதான். ஆனா என் ஈடு பையன் என்னைவிட உயரம் குறைவுங்கறதால நல்ல வாய்ப்பு மிஸ்ஆயிடுச்சு.

**சரி, 'தென்றல்' கேரக்டர் தாமரை மாதிரி பிடித்த எழுத்தாளர்?**

"நான் ஆங்கிலப் புத்தகங்கள்தான் படிப்பேன். தமிழ்ல ஸ்கூல்லியே முதலா வந்தாலும் ஏனோ தமிழ் புத்தகங்கள் படிக்க ஆர்வம் வரலை."

**பள்ளிப் பெண்கள் எல்லாம் ஹீரோயினாயிடறாங்களே!"**

"ஸாரி, பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் நடனம் மற்றும் பாட்டு சார்ந்த பள்ளி ஒன்றை தொடங்கப் போகிறேன். தமிழ் சினிமா நடிகை என்றால் கிளாமர் என்றாகி விட்டது. அப்படியே நல்ல கேரக்டர்களில் நடிச்சாலும் அதில் கிடைக்கும் பேர், புகழையெல்லாம் என் கலைத் திறமைக்கே பயன்படுத்துவேன்."

**- சநகன்**

படங்கள்: **பப்பி**



# கோபாலபுர கூத்து!

## சின்னான் செய்திகள்

'நவோமி கேம்பல்' தெரியுமா? கறுப்பு அழகி. உலகின் டாப் மாடல்! நவோமி, நெல்சன் மண்டேலா சிறுவர் அறக்கட்டளைக்கு நிதி திரட்டும் நிகழ்ச்சிக்காக பிரான்ஸ்ல கேன்ஸ் நகர்ல ஒரு படகுல போயிருக்காங்க. நிகழ்ச்சிக்காக அணிய வச்சிருந்த டிரெஸ்ஸை யாரோ திருடிட்டுப் போயிட்டாங்களாம். ஏற்கெனவே 'இல்லாத' மாதிரிதான் டிரெஸ் போடுவாங்க, இதுல உண்மையிலேயே இல்லாமப் போனதால, நவோமி செம அப்செட்டாம். அப்புறம் அங்கிருந்த ஒரு மாடலோட டிரெஸ்ஸை கடன் வாங்கிப் போட்டாங்களாம். இதுக்கு முன்னாடி நவோமியோட நகையும் திருட்டுப் போயிருக்கு. யாருப்பா அந்த 'மாயாவி'. அடுத்து நவோமியையே கடத்திராதப்பா!

கோபாலபுரத்துல அப்படி ஒரு கூத்து நடந்து போச்சு. நான் சொல்றது கோவை கோபாலபுரத்துல! அடிக்கடி அந்த ஹோட்டலுக்கு சாப்பிட வர்ற அந்தப் பொண்ணைப் பார்த்து, காதல்ல தடுக்கி விழுந்துட்டாரு, சர்வர் ஒருத்தர். அன்னிக்கு 'பில்'லோட சேர்த்து, காதலையும் சொல்ல, அந்தப் பொண்ணு வீட்டுக்குப் போயி அழுது புரண்டு, சொந்தக்காரங்களோட ஓட்டலுக்கு வந்துச்சாம். அப்புறமென்ன, சர்வருக்கு 'சப்ளை' பண்ண வேண்டியதெல்லாம் பண்ணி, அவரை போலீஸ் ஸ்டேஷனுக்கு 'பார்சல்' பண்ணிட்டாங்களாம்! இட்லி, வடை, பூரி, பொங்கல், போண்டா, பஜ்ஜி, தோசை வரிசையில காதலுக்கு இடமில்லை போல!

திருப்பதியில பொம்பளைங்களுக்கு பொம்பளைங்களே மொட்டை அடிக்க ஒரு திட்டத்தைக் கொண்டு வரலாமான்னு பேசியிருக்காங்க. அப்புறம் ஆகம விதிப்படி தப்புன்னு அந்தத் திட்டத்தை ஒத்தி வச்சுட்டாங்களாம். இது மொட்டைத் தலைக்கும், முழங்காலுக்கும் முடிச்சுப் போடுற காரணமான்னு எனக்குப் புரியல. நல்ல திட்டம்தான். சீக்கிரமா முடியெடுங்க... ச்சீ... முடிவெடுங்க!

நாயை வாக்கிங் கூட்டிட்டுப் போனா என்ன செய்யலாம்? நாம ஒண்ணும் செய்ய முடியாது. நாய்தான் தன்னோட 'கடன்'களைச் செய்யும்னு சொல்றீங்களா? ஆனா சிட்னி நகரத்துல ஒருத்தர், ஒரு பார்க்ல, ஒரே சமயத்துல 20 நாய்களை கன்ட்ரோலா ஒரே திசையில ஒரு கிலோமீட்டர் வாக்கிங் கூட்டிட்டுப் போயிருக்காரு. இது உலக சாதனையாம். நம்ம ஊரு குப்பன், சுப்பனெல்லாம் முப்பது நாப்பது ஆடு, மாடுகளை ஒரே சமயத்துல பல மைல்கள் மேய்ச்சலுக்குக் கூட்டிட்டுப் போறாங்க. அதையெல்லாம் கணக்கிட்டா குப்பன், சுப்பன் டெய்லி அவங்க ரெக்கார்டை, அவங்களே முறியடிப்பாங்க!





• ஷ்ரத்தாநந்தா



• ஷகீரா

# சமாதி கட்டிய சாமியார்!

"பதினாறு வருடங்களுக்குப் பிறகு நியாயம் கிடைத்திருக்கிறது. எங்கள் அம்மா இனி கல்லறையில் உறங்கலாம்....." கண்ணீருடன் சொல்கிறார் மகள் சபா.

சமீபத்தில் கர்நாடகாவை உலுக்கிய கேஸ், ஷகீரா கொலை சம்பவம். 1991, ஏப்ரல் 28ம் தேதி ஷகீரா உயிருடனேயே அவரது கணவரால் வீட்டின் பின்புறத்தில் புதைக்கப்பட்டார். மூன்று வருடங்கள் கழித்து 1994ல், வீட்டு வேலைக்காரன் அளித்த வாக்கு மூலத்தின் பேரில், உடல் கண்டெடுக்கப்பட... ஷகீராவின் கணவர் ஸ்வாமி ஷ்ரத்தாநந்தா கைது செய்யப்பட்டு, நீதிமன்றத்தில் வழக்கு நடைபெற்றுக் கொண்டு வந்து, கடந்த ஞாயிறன்று ஷ்ரத்தாநந்தாவுக்கு தூக்கு தண்டனை என்று தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது.

ஷகீரா, மைசூர் திவான் மிர்ஸா இஸ்மாயிலின் பேத்தி. கோடீஸ்வரி. பேரழகி. இந்தியத் தூதரக மேலதிகாரியான அக்பர் கலீலீயை மணந்து நான்கு மகள்களைப் பெற்றார். ஆண் வாரிசு இல்லையே என்ற ஏக்கம் ஷகீராவுக்கு!

82களில் தில்லிக்கு ஓர் அரச குடும்ப விழாவுக்குச் சென்றிருந்த போது, ஷ்ரத்தாநந்தாவை சந்தித்திருக்கிறார் ஷகீரா. சாமியார் என்ன வசியம் செய்தாரோ. தன் கணவரை விவாகரத்து செய்துவிட்டு ஷ்ரத்தாநந்தாவை 86ல் மறுமணம் செய்து கொண்டார் ஷகீரா.

ஷ்ரத்தாநந்தாவின் பூர்வாசிரமப் பெயர் முரளி மனோகர் மிஸ்ரா. படிப்பு என்பது ஏறாமல் மத்தியப் பிரதேசத்தில் வளைய வந்து கொண்டிருந்த இவர் கண்ணில் ஷகீரா பட்டார். "என்னிடம் மாஜிகல் பவர் இருக்கிறது. உனக்கு மகன் பிறப்பான். அது என் மூலமாகத்தான்...." என்றெல்லாம் பசப்பு வார்த்தைகளைக் கூறி, ஷகீராவை மயக்கிவிட்டார்.

திருமணம் முடிந்த ஒரு சில வருடங்களிலேயே பிரச்னை. ஷ்ரத்தாநந்தாவின் கண்முன்னால் ஷகீராவின் கோடிக்கணக்கான சொத்து தாண்டவமாட, இவளை எப்படியேனும் குளோஸ் பண்ணி விட வேண்டும் என்று முடிவு கட்டினார்.

தூக்க மாத்திரைகளைக் கொடுத்து, அவளை ரிச்மண்ட் ரோட்டிலிருக்கும் ஷகீராவின் பங்களாவிலேயே உயிருடனேயே புதைத்து விட்டார். நவீன அனார்கலியாக மாண்டு போனார் ஷகீரா. கிட்டத்தட்ட மூன்று வருடங்கள் எந்தவிதத் துப்பும் கிடைக்காமல் காவல் துறை அல்லாட, ஹெட் கான்ஸ்டபிள் மகாதேவாவின் கையில் வீட்டு வேலைக்காரன் கிடைக்க... அவன் உண்மையைப் பிட்டுப்பிட்டு வைக்க... அதிர்ச்சியுற்றது உலகம்!

"சிறையில் சிறந்த கைதி என்ற விருது வாங்கியுள்ளேன். மேலும் 96 வயதுடைய வயோதிகத் தந்தையைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு எனக்குள்ளது" என்று படு பவ்யமாகப் பேசும் ஷ்ரத்தாநந்தாவை, பெல்காம் ஜெயிலுக்கு மாற்றியுள்ளனர்.

ஷ்ரத்தாநந்தாவுக்குள் ஒரு வஞ்சகாநந்தா இருந்ததை ஷகீரா உணராமல் போனதும் ஏனோ?

- லதா சேகர்



# காதல் செய்ய விரும்பு

இந்தப் படத்தை இயக்குனர் எஸ்.ஜே. சூர்யா, செல்வ ராகவன், தனுஷ், சிம்பு, பாடலாசிரியர் பா. விஜய் ஆகியோர் பார்க்க நேர்ந்தால்...

**எஸ்.ஜே. சூர்யா :** டேய்... டேய்...டேய்... சூர்யா! ப்ளெடி சூர்யா...! எப்படிடா இப்படியொரு சூப்பர் நான்வெஜ் கதை உன் நாலேஜுக்கு எட்டாமப் போச்சு...? கோயமுத்தூர் காலேஜ்ல படிக்கும்போது ஹீரோ காதலிக்கிறான்! கவிஞனா மாறிடுறான். ஆனால் காதலி கல்யாணத்துக்கு முன்னாடியே ஒருமுறை கணவன், மனைவியா வாழ்ந்து பார்க்கலாம்ன்னு கூப்பிடுற காஸ்மோபொலிட்டன் கேர்ள்... ஆனா... கட்டுப்பெட்டி பையனா பயப்படுற ஹீரோ... வேர்த்து விறுவிறுத்து மறுத்துடுறான். காதலி கழட்டி விட்டுறா!

வெறுத்துப் போய் சென்னைக்கு வந்து படிக்கிற நம்ம ஹீரோவைப் பார்த்து, நம் கலாசாரத்தை மதிக்கிற பொண்ணு காதலிக்கிறா. இவன் பழைய அனுபவத்துலே ஆளே தலைகீழா மாறிப் போய், ஐ லவ் யூ சொல்லணும்ன்னா... அம்மா, அப்பா விளையாட்டை ஒரு முறை ஒத்திகை பார்க்கலாம்கிறான்... ஆனா இவன் விளையாட்டு அவகிட்டே பலிக்கல... 'காதலை கொச்சைப் படுத்தின நீ ஒரு எச்சை'ன்னு சொல்லிப் போயிடுறா... அடடா! என்ன கதை... என்ன கதை.. முனியாண்டி விலாஸ் பிரியாணி, சரவணபவன் சாம்பார் வடை இரண்டையும் கலந்து அடிச்ச மாதிரி... ஒரு புது ட்ரீட்.

**செல்வராகவன்:** - இந்த செல்வராகவனுக்கும் அந்த பார்கவனுக்கும் (படத்தின் இயக்குனர்) ஏதோ ஒற்றுமை இருக்குன்னு அப்போவே தோணுச்சு! நாம துன்னுவதோ இளமையிலே போட்ட விதை... பார்கவன் வரைக்கும் வந்து வதை பண்றதைப் பார்க்கும் போது... மணிரத்னமெல்லாம் ஒரு டிரெண்ட்செட்டரான்னு நெனைக்கத் தோணுது... ஆபாசத்துக்கு நடுவுலே நம்ம விமர்சகர்களுக்கு மசாஜ் பண்ணி விடுற மாதிரி, கொஞ்சம் மெசேஜூம் கொடுத்திருக்கார். மிஸ்டர் பார்கவன்! உங்க அட்ரஸ் என்ன 7G இல்லாடி காலனியா?

**தனுஷ்:** போயஸ் கார்டன்லேந்து சரவணன் பேசறேங்க. படத்தோட அறிமுக ஹீரோ சந்தோஷ் அச்சு அசலா என்னை மாதிரி இருக்கிறதைப் பார்க்கிறப்போ... இந்தக் கதையை என்ன மனசுல வெச்சுத்தான்... இயக்குனர் உருவாக்கி இருக்காருன்னு இட்டவட்டமா தெரியுது. அநேகமா அப்பாகிட்டே வந்து கதை சொல்லி, ஆபாச பர்சென்டேஜ் பத்தலேன்னு பார்கவனை பத்தி விட்டிருப்பார். எப்படியோ ரெண்டு சீனியர் ஹீரோயின்கள்கூட உருண்டு பெரண்டு நடிக்க முடியாமப் போச்சு... ஜஸ்ட் மிஸ்ட்...

**சிம்பு:** (அப்பா ஸ்டைலில்) டேய் பார்கவா! கட்டிலை வெச்சு கதை எழுதுறதுலே நான் ஒரு லிட்டில் சூப்பர் ஸ்டார்... நீ வெறும் தொட்டில் ஸ்டார்... கதாநாயகிய கடிச்சு ஆபாசமாப் போடுவேன் - போஸ்டர்... அதுக்கு வழக்கு தொடுத்தா அதுதான் எனக்கு பூஸ்டர்! எங்க வழியிலே எதுக்கு நுழைக்கிறே தலை! காதல்ன்ற பேர்லே கலாசாரத்தை கெடுக்குறது ஒரு கலை!

**பா. விஜய்:** தேசிய விருதுக் கவிஞனாக நான் முடிசூடும் நாளை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கும்போது, முட்டுக்கட்டையாக யார் இந்த யுரேகா? "யூஸ் பண்ணுடா" என்று என்னைவிட மலிவான வார்த்தைகளைப் போட்டு பாடல் எழுதினால், என் பேனாவுக்கு கிலி பிடிக்கிறது... வலியில் தலை துடிக்கிறது... யுரேகா! கவிதை வழியே உன்னைக் கண்டிக்கிறேன்!

கற்பனை: **விஷ்வல்தாசன்**

● ஜஸ்ட் பாஸ்

# போட்டுத் தாக்கு!

## ரஜினியிடம் கேட்கக் கூடாத கேள்விகள்!




1. அரே...அரே...அரே... ஜுஜுபி, ர்ரிப்பீட்டு போன்ற செந்தமிழ்ச் சொற்களை கத்துக் கொடுத்தது யாரு?

2. போர் அடிக்கிறப்பெல்லாம் கே.எஸ்.ரவிகுமார், ஹரி போன்றவர்களை டிஸ்கஷனுக்கு கூப்பிடுவீங்கதானே?

3. வாயிலிருந்து சிகரெட் எடுக்கிற டெக்னிக்கை மாப்பிள்ளைக்குக் கத்துக் கொடுத்தாச்சா?

4. லேட்டா வந்தா, அதெப்படி லேட்டஸ்டாகும்?

5. நீங்களும் அன்புமணியும் பீச் ஓரமா 'முஸ்தபா... முஸ்தபா...' பாடறீங்களாமே!

6. தமிழ் சினிமா கதாநாயகர்களுக்கு வி.ஆர்.எஸ்., ரிடையர்மெண்டே கிடையாதா?

7. உங்க புதுப் படத்துக்கு பதினாறு வயசுல ஹீரோயின் கேக்கறீங்களாமே!

8. உங்க இரண்டாவது பொண்ணுக்கு சீக்கிரம் 'ஜெயம்' உண்டாகுமா?

9. வாய் கொப்பளிக்கும் போது வந்ததா 'லகலகலக' ஐடியா?

10. இமயமலைக்குப் போனதும் பத்திரிகைகளுக்கு போஸ்ட் கார்டு போட்டுருவீங்களாமே!



அஞ்சலி



# தி.ஸ்ரீ.ரங்கராஜன்

# பரம ரசிகர்!

‘கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டு விழாவின் போது (செப்டெம்பர் 1999) நூற்றாண்டு விழா குழுவினர் கல்கியின் சிறந்த கதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் அடங்கிய ஒரு நூல் வெளிவர வேண்டுமென்று தீர்மானித்தார்கள். தீர்மானம் போட்ட பிறகு, தொகுக்கும் பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது என்ற கேள்வி எழுந்தது. உடனடியாக எனக்கு ரங்கராஜனைத்தவிர வேறு யாருமே தோன்றவில்லை. நன்கு யோசித்த பிறகும், இவரைவிடச் சிறந்த ஒருவர் நினைவுக்கு வரவில்லை. காரணம் கல்கி அவர்களுடைய பரம ரசிகர் ரங்கராஜன் என்று சொன்னால் போதாது. கல்கி விசிறி, கல்கியை கரைத்துக் குடித்தவர், மனப்பாடம் செய்தவர் என்றெல்லாம் சொன்னாலும் போதாது. கல்கி பித்தர் என்று சொன்னால் ஒரு வேளை பொருத்தமாக இருக்கலாம். அவர் கல்கி பித்தராக இருப்பது மட்டுமல்ல, அவரை அணுகுகிற அனைவரையும் கல்கி பித்தராக அடித்து விடுவார். அவ்வளவு தூரம் கல்கியின் எழுத்துகளில் மூழ்கிக் குளித்தவர்’- வானதி பதிப்பகம் செப்டெம்பர் 1999ல் வெளியிட்ட 'கல்கி களஞ்சியம்' நூலுக்கு கல்கி ராஜேந்திரன் எழுதிய முன்னுரையில ஒரு பகுதி. அதே புத்தகத்துக்கு தொகுப்பாசிரியர் ரங்கராஜன் எழுதிய முன்னுரையில் ஒரு பகுதி:

‘கல்கி என்னும் எழுத்தாளர் தமிழ் பத்திரிகை உலகில் கிட்டத்தட்ட 30 வருஷங்களில் எழுதி வந்த சிறுகதைகள், நெடுங்கதைகள், நவீனங்கள், சரித்திர நாவல்கள், தலையங்கங்கள், அரசியல் கட்டுரைகள், கலைக் கட்டுரைகள், பயணக் கட்டுரைகள், புத்தக விமரிசனங்கள் என்று எண்ணிறந்தவை. ஒவ்வொன்றையும் புதுப்புது உத்தியுடன் எழுதினார். இந்த எழுத்துக் கடலில் எதைத் தேர்ந்தெடுப்பது, எதை விடுவது என்பது அவரே சில சமயம் விமரிசனத்தில் "வெல்லப் பிள்ளையாரில் எந்தப் பக்கம் அதிகத் தித்திப்பு" என்று திணறிய விதம் தான்'- அப்படி கல்கியின் பரம ரசிகரும், "கல்கி களஞ்சியத்தின்" தொகுப்பாசிரியருமான தில்லை ஸ்தானம் ஸ்ரீனிவாச ராகவ ரங்கராஜன், கடந்த 26.5.2005 வியாழக் கிழமை அன்று தமது 83வது வயதில் இறைவனடி சேர்ந்தார்.

ரங்கராஜன் தொழில் ரீதியாக ஒரு வழக்கறிஞர். தமிழ் இலக்கியத்திலும், பண்பாட்டிலும் மிகுந்த ஈடுபாடு உள்ளவர். சென்னை சங்கீத வித்வத் சபையின் ஒரு செயலாளராக பல ஆண்டுகள் பணி புரிந்தவர். மூத்த கலைஞர்களை சரியான முறையில் கௌரவிப்பதிலும், இளம் கலைஞர்களை ஊக்குவிப்பதிலும் எப்போதும் முன் நின்றவர். நோய்வாய்ப்பட்டு மருத்துவ மனையில் இருந்தபோதும் அவரைப் பார்த்தபோது, 'நமது சமூகத்தில் தற்போது புரையோடிக் கொண்டிருக்கும் சில குறைபாடுகளை பற்றித் தெரிவித்து 'கல்கி' இன்று இருந்திருந்தால், இந்தக் குறைபாடுகளுக்கு ஒரு தீர்வு கண்டிருப்பார்' என்றும் தெரிவித்தார்.

அந்த கல்கி பக்தர் அமர உலகத்தில் இன்று கல்கியுடன் அவர் எழுத்துகளைப் பற்றி பேசிக் கொண்டிருப்பார் என்பதில் சந்தேகமில்லை!

- வி.கோபாலன்

## 4 பர்சனல் டைரி

**வீ**டு முழுவதும் இறைந்து கிடக்கும் விதவிதமான பொம்மைகளோடு விளையாட ஏனோ விருப்பம் இருந்ததில்லை எனக்கு. மாறாக சைக்கிள் மீதான என் முதல் காதல் மிக்க ஆழமானது. யாரும் கற்றுத்தர வேண்டிய அவசியமில்லாத சைக்கிள் அது. இடமோ, வலமோ எந்தப் பக்கம் சாய நேர்ந்தாலும், கீழே விழுந்து விடாமல் தாங்கிப் பிடிக்க கூடுதலாய் இரண்டு குட்டிச் சக்கரங்கள் பொருத்தப்பட்ட அற்புத வாகனம். நம் கால்களுக்குக் கீழே பூமி நழுவி ஓடும் அற்புதத்தை எனக்கு முதன் முதலாக அறிமுகப்படுத்தியவை அதன் மிதிகட்டைகள்.

பிறகு கொஞ்சம் வளர்ந்ததும் சற்று பெரிய சைக்கிளில் எதிர் காற்றையே எதிர்த்து மிதித்த போது, எனது பயங்களின் புதிர் முடிச்சுகளில் பாதிக்குமேல் அவிழ்ந்து விட்டன. தம்பியும் சைக்கிள் விடக் கற்றுக் கொண்ட பிறகு, என்னைப் பின் தொடர்ந்து வருவான். அவன் பாதுகாப்பாக ஓட்டி வருகிறானா என்று கவலைப்படுவதை விட, அவன் முன்பு சைக்கிளில் பல வித்தைகள் செய்து காட்டுவதில் கொள்ளை விருப்பம். சைக்கிள் மணியை விதவிதமாய் ஒலித்து, அது எழுப்பும் இசையைக் கொண்டு சங்கேத பாஷையில் பேசிக் கொள்வது இனிய ஜாலம்.

**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை. எனது வகுப்புத் தோழனின் அண்ணன் சைக்கிளோடு




# யார் இந்த



வந்துவிட்டான். நானும் எனது சைக்கிளை எடுத்துக் கொண்டேன். தம்பி அவனது சைக்கிளோடு எங்களைப் பின் தொடர்ந்தான். டிராபிக் இல்லாத தெருக்களில் எங்கள் சைக்கிள் சாகஸங்கள் நடந்தேறும். சைக்கிளை வேகமாக ஓட்டிச் சென்று, திடீரென பிரேக் பிடித்தால் பின் சக்கரம் மட்டும் தேய்த்துக் கொண்டு போய் திரும்பி நிற்கும். இந்த சாகஸத்தை சர்வசாதாரணமாய் நான் செய்வதைப் பார்த்து தம்பியும் அச்சுப் பிசகாமல் அப்படியே செய்யப்போய், தெருவோரத்தில் ஒரு பெட்டிக்கடையின் அருகில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சைக்கிளை மோதித் தள்ளிவிட்டான். கோபத்தோடு எழுந்த பெட்டிக்கடைக்காரர் தம்பியின் கையைப் பிடித்து வெடுக்கென்று இழுத்து அவனை அடிப்பதற்காக திட்டிக் கொண்டே கையை ஓங்கினார். அந்த நொடியில் சைக்கிளை அப்படியே தரையில் போட்டுவிட்டு ஓடி வந்த என் நண்பனின் அண்ணன், கடைக்காரரின் கையைப் பிடித்து நிறுத்தினான். "கை ஓங்குற வேலையெல்லாம் வெச்சுக்காதே" என்று அத்தனை பெரிய மனிதரை அதட்டினான். "நீ யார்டா கேட்குறதுக்கு?" என்று திமிறிய பெட்டிக் கடைக்காரரின் கேள்விக்கு... "இவன் என்னோட தம்பிய்யா" என்றான். எனக்குச் சுரீர் என்று உள்ளுக்குள் சுட்டது.

சம்பந்தமே இல்லாத ஒருவன் வந்து, நம்முடைய தம்பியை, அவனது தம்பி என்று சொல்லி காப்பாற்றுகிறான். நாம் தம்பி என்கிற உணர்வற்று நின்று விட்டோம். அந்தக் கணத்தில் குற்ற உணர்ச்சியில் கூனிக்குறுகிப் போனேன். அந்தச் சம்பவம், தம்பியை, அவனது உறவை எனக்கு உணர வைத்து விட்டது. கடைக்காரரின் மிரட்டலில் கலங்கி அழுதுவிட்ட தம்பியை அழைத்துக் கொண்டு, கனத்த மனதோடு வீடு வந்து சேர்ந்தேன். அன்று முதல் தம்பி மீது மட்டுமல்ல, தம்பிக்காக இறங்கி பரிந்து கொண்டு வந்த நண்பன் மீதும் அன்பு கொண்டேன்.

தம்பியும், தங்கையும் எனக்கு விளையாட்டுத் தோழர்கள் ஆன பிறகு... இன்னொரு தோழன் எங்கள் வீட்டில் இடம் பிடிக்க வந்தான். அவன் பெயர் பிரின்ஸ். ஆறு மாதக்



குட்டியாக, அத்தை மகன் தங்கவேல் மாமா வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார். வெள்ளை வெளேர் என்ற பாலின் வண்ணத்தில், பஞ்சு மிட்டாய் முடிகளோடு வீட்டுக்குள் அவன் நுழைந்தபோது, ஒரு குட்டி ராஜ குமாரனைப் போல அவனை உபசரித்தேன். அவனுக்கு நெற்றிப் பொட்டு வைத்து, வாலில் ரிப்பன் கட்டி அழகு பார்ப்பாள் தங்கை. படுக்கை வரை வந்து எனது வயிற்றின் கதகதப்பான வெப்பத்தில் தூங்குவான் பிரின்ஸ்.

தம்பி, தங்கையை விட என்னிடம் அதிக அன்பை அது எதிர்பார்த்தது. பள்ளி முடிந்து நான் வீடு திரும்பும் போது, இரண்டு முன்னங் கால்களையும் தூக்கி வா! வா! என்று கூப்பிடும். இத்தனை நேரம் என்னை விட்டு விட்டு எங்கே போய்விட்டாய் என்று உரிமையோடு கேட்பதைப் போல குழைந்து குழைந்து எதையோ குழந்தைக் குரலில் சொல்லும். யூனிஃபாமை கழற்றுவதற்கு முன்பே, கை, கால், முகம் என்று எங்கெல்லாம் வாய்ப்பிருக்கிறதோ அங்கெல்லாம் முத்த மழை பொழியும். வீட்டின் எந்த மூலையில் நான் இருந்தாலும் மோப்பம் பிடித்துக் கொண்டு என்னைத் தேடி வந்துவிடும் பிரின்ஸ், எனது பெருமை. அதை பந்தாவாக கூட்டிக் கொண்டு என் நண்பர்களின் வீடுகளுக்குச் சென்று காட்டுவதில் அப்படியொரு குஷி. அப்போது எங்கள் தெருவில் வேறு யாரிடமும் அதுபோன்ற நாய் இருக்கவில்லை.

அதிகாலையில் கடற்கரைக்கு வாக்கிங் செல்லும் அப்பா, ஒருமுறை பிரின்ஸையும் கூட்டிக் கொண்டு போனார். பிரின்ஸ் வீட்டுக்கு வந்து மூன்று வருடமாகி விட்டது. நன்றாக பழகிவிட்டதே என்று நினைத்து, கழுத்துச் சங்கிலியை அவிழ்த்துவிட்டு கூடவே வரும் என்ற நம்பிக்கையில் கடற்கரையில் நடந்திருக்கிறார். சிறிது தூரம் அப்பாவைப் பின் தொடர்ந்து வந்த அது திடீரென்று காணாமல் போனது. நாலா பக்கமும் தேடிக் களைத்து வீடு திரும்பிய அப்பா, விஷயத்தைச் சொன்னதும் எனக்கு தலை கிறுகிறுத்தது! அன்று முழுவதும் நான் சாப்பிடவில்லை. யார் யாரோ வந்து சமாதானப்படுத்தியும் கேட்காமல் அழுது கொண்டிருந்தேன். "என் நண்பனே... என்னைப் பிரிந்து உன்னால் எப்படிப் போக முடிந்தது?" பதைபதைப்போடு, பிரின்ஸ் கிடைத்து விட மாட்டானா என்று சைக்கிளை எடுத்துக் கொண்டு தெருத் தெருவாகத் தேடி அலைந்தேன். வகுப்பில் பாடம் நடந்து கொண்டிருக்கும்போது பிரின்ஸை நினைத்து நான் அழுது கொண்டிருப்பேன். தெருக்களில் எங்கேனும் பிரின்ஸ் போல தோற்றமளிக்கும் நாய்களைப் பார்த்துவிட்டால், காரை நிறுத்தச் சொல்லி பிரின்ஸ்! பிரின்ஸ்! என்று கூப்பிட்டுப் பார்ப்பேன். ஆனால் கடைசி வரை அவன் கிடைக்கவே இல்லை. பிரின்ஸ் போய் விட்ட பிறகு எங்கள் வீட்டுக்கு வாங்கி வரப்பட்ட விலையுயர்ந்த நாய்க்குட்டி மீது எனக்கு எந்த ஈடுபாடும் வரவில்லை. அப்படி எதுவும் வந்து விடக் கூடாதே என்கிற பயத்தில், பாட்டி அதை யாரிடமோ தூக்கிக் கொடுத்து அனுப்பிவிட்டார்.

இழப்பின் வலியை கனமாக உணர வைத்து



• தம்பி, தங்கை, நான், நடுவே பிரின்ஸ்

விட்டுப் போனது பிரின்ஸின் பிரிவு. நம்முடையதெல்லாம் ஒரு வலியா என்பதைப் போல ஏழாம் வகுப்பில் சோகத்தின் மொத்த உருவமாக ஒரு மாணவனைச் சந்தித்தேன். ஆறாம் வகுப்பில் தேறி, ஏழாம் வகுப்புக்குள் நுழைகிறேன். முதல் நாள் வகுப்பு. ஏற்கெனவே தன்னந்தனியாக ஒரு பையன் மட்டும் அங்கே அமர்ந்திருந்தான். புதிதாக வந்த எங்களை முகம் கொடுத்துப் பார்க்கத் திராணியற்று தலை குனிந்து அழுது கொண்டிருந்



• தம்பிக்கு...

தான். அழுது அழுது சட்டை முழுதும் நனைந்திருந்தது. பலர் அவனைப் பார்த்து கழுக்கமாகவும், சிலர் கிண்டலாகவும் சிரித்தார்கள். எனக்குக் குழப்பமாக இருந்தது. அவனை நெருங்கி, அவனது தோளைத் தொட்டு "ஏன் அழுகிறாய்?" என்றேன். "நான் ஃபெயிலாகிட்டேன். மறுபடியும் நான் செவன்த்துதான் படிக்கணுமாம்" என்று அவன் தொண்டை கம்மியபடிச் சொன்னபோது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. தோல்வியடைந்தவனின் துக்கம் எப்படிப்பட்டது என்பதை அருகிலிருந்து உணர்ந்தேன். அவன் தோளைத் தட்டிக் கொடுத்து, "உனக்கு நான் இருக்கேன்டா... நாம ஃப்ரெண்டா இருப்போம்" என அவனுக்கு ஆறுதல் சொன்னதும் கொஞ்சம் சகஜமானான். ஆனால் அந்த நிமிஷமே எனக்குள் ஒரு கிலி. இவனைப் போல நாமும் ஃபெயிலாகிவிட்டால்... அந்த நினைப்பே பதுங்கிக்கிடந்த எனது பயங்களை மீண்டும் பதியம் போட்டு விட, மறுபடியும் நடுங்க ஆரம்பித்தேன்.



• ...நான் நம்பிக்கைக்குரிய அண்ணனா?

சக மாணவர்கள் பலரது சட்டைகளில் பட்டன் இல்லை. கசங்கிய சட்டைகளை அணிந்து வருபவர்களிடம் கேட்டால், "எங்கிட்டே இரண்டு செட் தான்டா இருக்கு" என்பார்கள். ஒருவன் இடைவேளையின்போது பள்ளி வாயிலைப் பார்த்து அழுது கொண்டிருப்பான். "லஞ்ச் அவருக்கு முன்னாடி ஃபீஸ் கட்டலேன்னா வீட்டுக்குப் போயிட வேண்டியதுதான்னு டீச்சர் மிரட்டுறாங்க... அதான் அம்மா வராங்களான்னு பார்க்கிறேன்" என்பான். அய்யோ! இவர்களுக்கு இவ்வளவு கஷ்டங்கள் இருக்குமா? என்று ஆச்சர்யமாய் இருந்தது. நமது வீட்டில் ஏர்கண்டிஷன் இருக்கிறது. டீ.வி இருக்கிறது. தனி அறை. கேட்டதையெல்லாம் வாங்கித்தர அம்மா-அப்பா இருக்கிறார்கள். செல்லம் கொஞ்ச பாட்டி இருக்கிறார். ஆனாலும் இத்தனை பயமும், துக்கமும், ஏன் என்னை அழுத்துகிறது? தன்னம்பிக்கை என்பது மொத்தமாய்த் தகர்ந்து போய் வீட்டிலும் வெளியிலும் ஏன் ஒடுங்குகிறேன். பள்ளி முடிந்து வீடு திரும்பிய கையோடு அம்மாவிடம் கேட்டேன்...

(டைரியைத் தொடர்வேன்)

படம்: ஸ்ரீஹரி

"சார்... உயிர் போயிடுச்சுன்னா பரவாயில்லை. ஆனால் கை, கால் போயி வாழுறதெல்லாம் ரொம்ப அவஸ்தைங்க!" என்று பலர் கூறுவதைக் கேட்டிருக்கிறோம்.

"அவஸ்தைதான்! ஆனால் பிளாஸ்டிக் மற்றும் ரீ கன்ஸ்ட்ரக்டிவ் சர்ஜரி இருக்கும் போது, சீரமைக்க முடியாதது என எதுவுமே இல்லை. பிறவிக் கோளாறோ, விபத்து விபரீதமோ இப்போது சீரமைப்பு அறுவை சிகிச்சைகள் சர்வ சாதாரணமாகிவிட்டன. எனவே மனம் தளர வேண்டாம்" என்கிறார் டாக்டர் ஜி. பாலகிருஷ்ணன்.

சென்னை, ஸ்டான்லி அரசு மருத்துவமனையில் கை ஒட்டுறுப்பு அறுவை மையத்தில் மருத்துவ நிபுணராக முப்பது ஆண்டுகள் பணி புரிந்து பின்னர் தலைமையேற்று ஓய்வு பெற்றுள்ள இவர், தற்போது கீழ்பாக்கம், ஈகா தியேட்டரின் பின்புறம் உள்ள 'ரைட் ஹாஸ்பிடல்'லின் மருத்துவ இயக்குனராக இருக்கிறார்.

மைக்ரோ வாஸ்குலர், மைக்ரோ நியூரல், கை அறுவை மருத்துவம் என்ற மும்முனை அறுவை சிகிச்சையில் புகழ் பெற்று விளங்கும் பேராசிரியர் டாக்டர் ஜி. பாலகிருஷ்ணன், தாம் சந்தித்த இரு சிக்கலான கேஸ்களை இங்கே விவரிக்கிறார்.

"கோபாலனுக்கு சுமார் முப்பது வயதிருக்கும். பல்லவன் போக்குவரத்துக் கழகத்தில் டிரைவர். கொடூரமான சாலை விபத்தில் சிக்கி, பலத்த காயம் அடைந்திருந்தார். குறிப்பாக, வலது குதிகால் எலும்பு (கால்கேனியம் போன்) அடிபட்டு சிதைந்து விட்டிருந்தது. வலது பாதம் சரிவர இயங்காவிட்டால், அவர் டிரைவர் வேலையை எப்படித் தொடர முடியும்? உடனே, அவரது இடது கையிலிருந்து கொஞ்சம் சருமமும் தசை நாரையும் வெட்டி எடுத்து, குதிகாவில் ஒட்ட வைத்து சிகிச்சை அளித்தோம். 'வெட்டினோம், ஒட்டினோம்' என்று நான் எளிதாகச் சொல்லிவிட்டேனே தவிர, ரொம்பவே ரிஸ்க்கான அறுவை சிகிச்சை அது. நுண்ணிய நரம்புகள் ஒன்றுடன் ஒன்று சேர வேண்டும்; அதுவும் ரத்த ஓட்டத்துடன் இணைய வேண்டும். இந்த ஆபரேஷனுக்காக ஒரு வாரம் முன்






ஏற்பாடுகள் செய்து, பத்து மணி நேரம் அறுவை சிகிச்சை செய்து, ஒரு மாதம் தீவிரக் கண்காணிப்பில் வைத்திருந்தோம். புண் எல்லாம் ஆறி, நோயாளிக்குச் சற்றுத் தெம்பு வந்ததும், மூன்று மாத ரீஹாபிலிடேஷன் சிகிச்சை தரப்பட்டது.

'ஃப்ரீ மையோ டென்டினஸ் ஃபிளாப்' எனப்படும் இந்த அறுவை சிகிச்சை முறை, மிக அபூர்வமானது.

இப்போது கோபாலன் 'ஜம்' என்று பஸ் ஓட்டிக் கொண்டிருக்கிறார்.

கிட்டத்தட்ட பதினான்கு வருடங்களுக்கு முன் நான் ஸ்டான்லியில் தலை

மைப் பொறுப்பேற்றிருந்த சமயம். தொழிலாளி ஒருவர், வலது கை கட்டை விரல் துண்டான நிலையில் எங்களிடம் கொண்டு வரப்பட்டார். தொழிற்சாலை விபத்து.

ஆரம்பப் பரிசோதனைகள் நடந்து முடிந்த, அடுத்த நிமிடமே மின்னல் வேகத்தில் அறுவை சிகிச்சைக்குத் தயாராகிவிட்டேன். அவரது கால் கட்டை விரல் வெட்டி எடுக்கப்பட்டு, வலது கை கட்டை விரலாகப் பொருத்தப்பட்டது. கால் விரல் என்றே தெரியாத அளவுக்கு நகம் உட்பட அனைத்தையும் மிகுந்த தேர்ச்சியுடன் புனரமைப்பது மிகவும் சவாலான விஷயம். ரத்த நாளங்களை கவனத்துடன் இணைப்பதிலிருந்து நகத்தை அதற்கான நக தளத்தில் அமைப்பது வரை, கண்ணும் கருத்துமாகச் செய்ய வேண்டியிருக்கும். 'பிரைமரி ராப் அரவுண்ட் ஃபிளாப்' என்ற இந்த சிகிச்சைக்குப் பிறகு, அந்தத் தொழிலாளியின் கட்டை விரல் மிகவும் இயல்பான இயக்கம் பெற்றது மருத்துவ அதிசயம்.



• ஜி. பாலகிருஷ்ணன்

ஒட்டுறுப்பு அறுவை சிகிச்சைகளைத் தவிர, நரம்பு ரிப்பேர், நரம்பு மாற்றம், முகச் சீரமைப்பு, ஸ்பைன் சர்ஜரி, காஸ்மெடிக் சர்ஜரி, மூட்டு மாற்று அறுவை சிகிச்சை, என நிறைய மருத்துவச் சவால்களை, மேஜிக் போல செய்வதால், இவரது சக மருத்துவர்கள் இவருக்கு வைத்திருக்கும் பெயர் ஜூனியர் பிரம்மா!



# நம்பிக்கை தரும் கை!

**வி**பத்தில் கை, கால் விரல்கள் வெட்டுப்பட்டால், உடனடியாக என்ன செய்ய வேண்டும்?

- குழாயடியில் வைத்து, ஓடும் நீரில் அடிபட்ட பாகத்தில் தண்ணீர் படாமல் சுத்தம் செய்யவும்.
- துண்டான பாகத்தை சுத்தமான பிளாஸ்டிக் பையில் போட்டு பையின் கழுத்து பாகத்தை இறுக்கமாகக் கட்டிவிடவும். மூடியுள்ள ஒரு பாத்திரத்தில் ஐஸ்கட்டிகள் வைத்து, அதற்குள் பிளாஸ்டிக் பையை வைத்து கொண்டு வரவும்.
- அடிப்பட்ட உறுப்பின் மீது ஐஸோ, தண்ணீரோ நேரடியாகப் படக்கூடாது.
- விபத்து ஏற்பட்ட ஆறு - எட்டு மணி நேரத்துக்குள் மருத்துவமனைக்கு வந்துவிட்டால் ஆபரேஷனின் வெற்றி சதவிகிதம் 90- 100க்குள் அமையும். நேரம் கடத்தினால் ரிஸ்க்தான்.

- மினி

# புதிய பஞ்ச்!

வாகனங்களின் பின்னால் 'வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்', 'நாமிருவர் நமக்கு ஒருவர்' போன்ற வாசகங்களை எத்தனை நாட்கள்தான் படிப்பது! இதோ புதிய வாசகங்கள்:

- *ஒரு ஆள் குளிக்க ஒரு குடம் தண்ணீர்!*
- *தண்ணீர் லாரி சேவை; என்றும் நமக்குத் தேவை.*
- *ஒரு ஃபிகர்! ஒரு லவ்!*
- *உடையில் சிக்கனம்! வேண்டாம் இக்கணம்!*
- *சீரியலை வெறுத்து, அழுவதை நிறுத்து!*
- *செல்லில் அதிகம் பேசாதீர்! பில்லில் விழுந்து சாகாதீர்!*
- *விளம்பர இடைவெளி சீரியலுக்கு அவசியம்!*
- *லோனைப் போட்டு வீட்டைக் கட்டு! கட்டியதும் ஒழுங்காய் லோனைக் கட்டு.*
- *சீராக ஓடும் மூச்சு! மருத்துவரிடம் போனால் போச்சு!*

- வீ. விஷ்ணுகுமார்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2005

படைப்பாளிகளே,
வாசக எழுத்தாளர்களே!
நீங்கள் அனைவரும் ஆவலோடு
எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்
சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000**
**இரண்டாம் பரிசு - ரூ. 7,500**
**மூன்றாம் பரிசு - ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.



## விதிமுறைகள்:

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவர்தான் என்பதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி ஜெராக்ஸ் போன்றவை) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக் கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032**

- கதைகள் வந்து சேர கடைசி தேதி : **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் **ஆகஸ்ட் 1** ஆண்டு மலரில் வெளியாகும்.

படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**

'சுட்டாலு உன்னாரு ஜாக்கிரதா' (சுற்றத்தினர் இருக்கிறார்கள், ஜாக்கிரதை!) என்று ஒரு தெலுங்குப் படம் வெளியானது. பாலையா என்பவரிடம் பேசி அந்தப் படத்தைத் தமிழில் தயாரிப்பதற்கான உரிமையை வாங்கினோம்.

அந்தப் படத்தைப் பார்க்க வருமாறு ரஜினிகாந்துக்கு அழைப்பு விடுத்தோம்.

படத்தின் பெயரைச் சொன்னதும் 'ஐயையோ' என்றார் ரஜினி.

"நான் ஏற்கெனவே அந்தப் படத்தைப் பார்த்தாயிற்று. பாலையா என்பவர் எனக்குப் போட்டுக் காட்டினார். எனக்கு அந்தப் படம் பிடிக்கவில்லை. எனவே, ஸாரி, நான் இதில் நடிக்க விரும்பவில்லை" என்று மறுத்து விட்டார்.

"ஏன் வேண்டாமென்கிறீர்கள?" என்று நான் விடாப்பிடியாகக் கேட்டேன்.

"ரொம்பச் சாதாரண ரோல் அது. இப்ப நான் நடித்துக் கொண்டிருக்கும் காளி, ஜானி, படமெல்லாம் ரிலீஸானதும் என் இமேஜ் எங்கேயோ போய்விடும். அப்ப போய் இது மாதிரியான சாதாரண ரோல்ல நடிச்சா சரியா வராதே"என்றார்.

"ரஜினி... நீங்க சொல்றது தப்பு. முதல்ல உங்களோட நாலு படம் நல்லா ஓடணும். படம் நல்லா ஓடினாத்தான் உங்களை எதிர்பாப்பாங்க. அப்புறம்தான் உங்ககிட்டேயிருந்து எதிர்பாப்பாங்க" என்றேன் நான். 'எம்.ஜி.ஆர், சிவாஜி படமெல்லாம் வெற்றி பெற்றது இப்படித்தான்" என்றும் சொன்னேன்.

"ஸார்... அவங்க கிரேட். அவங்களை என்னோட கம்பேர் பண்ணாதீங்க. ப்ளீஸ். நான் தனி மனுஷன். என் வழியும் தனி" என்றார் ரஜினி. "நீங்க ஏன் இந்தப் படத்தை கமலை வைச்சு எடுக்கக் கூடாது?" என்று கேட்டார்.

"கமல்ஹாசன் நடிச்சா 'சட்டம் ஒரு இருட்டறை' சாயல் இருக்கும்" என்று சொல்லிவிட்டு, "நான் சொல்ற இந்தப் படத்தை நீங்க ஏற்கெனவே பார்த்திருந்தாலும் எனக்காக இன்னொரு தடவை பாருங்க" என்று கட்டாயப்படுத்தினேன்.

ஏவி.எம். ஜி தியேட்டரில் ஒரு நாள்

# "ஆண்டவன் போட்ட பிச்சை!"



• 'போக்கிரி ராஜா' படத்தில் ராதிகாவுடன்...



இரவு பத்து மணிக்குப் படம் பார்க்க வந்தார் ரஜினி. அதுவும் ஸ்கூட்டரை தாமே ஓட்டிக் கொண்டு வந்தார்.

'நீங்கள் இதற்காக வந்து சிரமப்பட வேண்டாம். நான் வந்து படம் பார்த்து விட்டுப் போகிறேன்' என்று ரஜினி சொன்னதால், நான் அன்று அவருடன் படம் பார்க்கவில்லை. அந்தத் தியேட்டருக்கும் போகவில்லை.

ஆனால் அவர் படம் பார்க்க வந்ததும் 'ரஜினி ஸ்கூட்டரில் வந்திருக்கிறார்' என்று எனக்குத் தகவல் கிடைத்ததுவிட்டது.

"படம் பார்த்துவிட்டு அவர் வீட்டுக்குப் புறப்பட்டதும் கூடவே நமது ஒரு காரை அனுப்பி அவர் பத்திரமாக வீடு போய்ச் சேர்ந்தார் என்று எனக்கு உறுதிப் படுத்துங்கள்" என்று ஊழியர்களுக்கு உத்தரவிட்டேன். அதன்படி ஒரு அம்பாஸிடர் கார் ரஜினியின் பின்னாடியே சென்றது.





...ஸ்ரீதேவியுடன்

ஏவி.எம்.சரவணன்

'பத்திரமாக வீடு போய்ச் சேர்ந்து விட்டார்' என்று நள்ளிரவில் எனக்கு ஃபோன் வந்ததும்தான் நான் நிம்மதியாகத் தூங்கினேன். பின்பொரு சமயம் ரஜினிகாந்துக்கு விபத்து ஒன்றில் அடிபட்டு சிகிச்சையின்போது வீட்டில் ஓய்வெடுத்து வந்தார். அப்போது அவரை வீட்டுக்குச் சென்று விசாரித்தேன். அப்போது பேச்சு வாக்கில் "ஏன், அன்று அப்படி தனியாக ஸ்கூட்டர் ஓட்டிக் கொண்டு வந்தீர்கள்?" என்று உரிமையுடன் நான் அவரைக் கடிந்து கொண்டேன்.

"நான் எப்போதும் என்னைப் பற்றி கவலைப்படுவதில்லை ஸார்" என்றார் ரஜினி.

அப்போது அவருக்குத் திருமணமாகி குழந்தைகளும் பிறந்துவிட்டன.

"அப்படியில்லை. உங்களைப் பற்றி கவலைப்படாமல் நீங்கள் இருக்கக் கூடாது. உங்களை வைத்துப் படமெடுக்கும் தயாரிப்பாளர்கள் உங்களை நம்பியிருப்பது மட்டுமல்ல, உங்களுக்கென்று ஒரு குடும்பம் இருக்கிறது ரஜினி. அதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள

வேண்டும்' என்று நான் வலியுறுத்திச் சொன்னேன்.

'சுட்டாலு உன்னாரு ஜாக்கிரதா' விஷயத்துக்கு வருவோம். எனக்காக அந்தப் படத்தை ரஜினி மீண்டும் ஒரு முறை பார்த்தார் என்றாலும், ஆர்வத்தோடு அதில் நடிக்க முன் வரவில்லை. "என் கருத்தில் நான் இன்னமும் உறுதியாகத்தான் இருக்கிறேன். ஆனா நீங்க ரொம்ப ஸ்ட்ராங்கா ஃபீல் பண்றதாலே நான் நடிக்கிறேன்" என்று ஒப்புக் கொண்டார்.

படம் எடுத்து முடிந்ததும் போட்டுப் பார்த்தோம். விசுவை அழைத்து அவரையும் படம் பார்த்து அபிப்ராயம் சொல்லச் சொன்னோம். படத்தின் ப்ளஸ் பாயிண்ட்டுகள் என்னென்ன, மைனஸ் பாயிண்ட்ஸ் என்னென்ன என்பதை ஒரு பேப்பரில் மிகவும் கச்சிதமாக எழுதிக் கொடுத்து விட்டார் விசு.

ராதிகா ரோலை இன்னும் டெவலப் செய்ய வேண்டும், மூன்றாவதாக ஒரு கேரக்டரையும் உருவாக்க வேண்டும் என்பது போன்ற சில யோசனைகளை விசு சொன்னார். அதன்படி செய்ததில் படம் பிரமாதமாக வந்து விட்டது. பஞ்சு அருணாசலம் அருமையாக வசனங்கள் எழுதினார். அவருக்கு வெற்றிகரமான இரண்டாவது சுற்றுக்கு, அவரது ரீ என்ட்ரிக்கு அந்த வசனங்கள் உதவின என்றால் மிகையில்லை.

போக்கிரி ரவிக்கு ஜோடியாக ராதிகா, ரஜினிக்கு ஈடு கொடுத்து ஒரு ரௌடியாகவே நடித்திருந்தார். ராஜா ரஜினிக்கு ஜோடி ஸ்ரீதேவி. ராஜாவுக்கு ஏற்ற ராணியாக நடித்திருந்தார். பாடல் காட்சிகள் நிறைவாக அமைந்திருந்தன. ஆர் முத்துராமன் வித்தியாசமான நடிப்பை வெளிப்படுத்தியிருந்தார்.

'போக்கிரி ராஜா' நூறு நாள் வெற்றிப் படமாக அமைந்தது. "வெற்றி விழாவில் பேச வேண்டும்" என்று நான் ரஜினிகாந்தைக் கேட்டுக் கொண்டேன்.

"ஐயோ... எனக்குப் பேச வராதே" என்றார் ரஜினி. "பரவாயில்லை. நான் எழுதித் தருகிறேன்" என்று இயக்குனர் எஸ்.பி. முத்துராமன் முன் வந்தார். அப்படியே எழுதியும் கொடுத்தார். அந்த உரையைப் பலமுறை படித்து மனப்பாடம் செய்து ஒத்திகையெல்லாம் பார்த்துவிட்டு மேடைக்கு வந்தார் ரஜினி. ஆனால் பாதிக்குப் பிறகு அந்தப் பேப்பரை மடித்து பாக்கெட்டில் போட்டுக் கொண்டார். தொடர்ந்து மிகச் சரளமாகச் சொந்தமாகப் பேசி அசத்தி விட்டார்.

"சரவணன் அவர்களின் கட்டாயத்துக்காகத்தான் நான் இப் படத்தில் நடித்தேன். அவருக்கு படம் பார்ப்பவர்களின் ரசனை நாடியைச் சரியாகப் பிடித்துப் பார்க்கத் தெரிந்திருக்கிறது. இனிமேல் சரவணன் எந்தக் கதையைச் சொன்னாலும் "ஆர்க்யூ பண்ணாம ஆக்ட் பண்றதுன்னு முடிவு பண்ணியிருக்கேன்" என்று மனம் விட்டுப் பேசி, மிகவும் கலகலப்பாக அந்த நிகழ்ச்சியைச் சிறப்பித்தார்.

அதுமட்டுமல்ல, அன்று அந்த விழாவில் அவர் பேசியபோது "சரவணன் எப்போதும் ஒரு மூலையில் கைகட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்" என்று அவர் சொன்னதும்தான் நான் உண்மையிலேயே என்னுடைய கை கட்டும் பழக்



"என்னங்க! பெண் பார்க்கிறதுக்கு இப்படி நடுசாமத்தில வந்திருக்கீங்க?"
"இப்பத்தானே எல்லாரும் டீ.வியில எல்லா மெகா சீரியலும் பார்த்து முடிச்சிட்டு ரிலாக்ஸா இருப்பீங்க..."
- எ. ஹிதாயத் ஹுமாயூன்

கத்தை உணர்ந்து கொண்டேன்.

ரஜினியின் சில குண நலன்களை நான் அறிந்தபடி இங்கே உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு மேலாக எனக்கு அவர் பழக்கம். எதையும் வெளிப்படையாகப் பேசிவிடும் குணம் படைத்தவர்.



• ஆச்சியுடன்...

''நான் உண்மையே பேசிப் பழகிட்டேன். இந்தப் பணம், புகழ், பேர் வந்துட்டா பொய் பேச வேண்டிய நிலைமையும் வந்துடும். சாப்பாட்டுக்கு வழியில்லாம கஷ்டப்பட்ட காலத்திலேயே உண்மை பேசிட்டு, வசதியான வாழ்க்கை அமைந்த பின் இப்போ பொய் பேச மனசுக்குப் பிடிக்கல. இனிமே வாழப் போறது கொஞ்ச நாள். அதுவரைக்கும் பொய் பேசாமலேயே இருந்திடலாமேன்னு தோணுது'' என்று என்னிடம் கூறியதுண்டு.

அடுத்தவர் மனம் நோகும்படி எதுவும் செய்து விடக்கூடாது என்பது ரஜினியின் கொள்கையாக இருக்கிறது. வீண் வம்பு பேசுவது என்பது அவரிடம் சுத்தமாகக் கிடையாது. வம்பு பேசும் இடத்தில் தாம் இருக்க வேண்டி வந்தால், தமது கண்களை மூடியபடி அமர்ந்து கொண்டிருப்பாரே தவிர, அந்த வம்பு அரட்டையில் கலந்து கொள்ள மாட்டார். இந்தப் பழக்கத்தை நான் என்.டி.ராமாராவிடம் பார்த்திருக்கிறேன்.

'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்' என்ற குறளில் சொல்லப்படும் மனப்பக்குவம் ரஜினிக்கு வாய்த்திருக்கிறது. சினிமா உலகில் நாங்கள் எல்லோரும் மிகவும் மதித்துப் போற்றும் 'ஆச்சி' மனோரமா, தேர்தல் நேரத்தில் ரஜினியைக் கடுமையாக விமர்சித்துப் பேசியது பற்றி அறிந்த போது, நான் மிகவும் அதிர்ச்சியடைந்தேன். சாகும்வரை நடித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்ட ஆச்சியின் திரையுலக வாழ்க்கைக்கு அவரே முற்றுப்புள்ளி வைத்துக் கொண்டாரோ என்று நினைக்கும் வகையில் அந்தச் சம்பவத்துக்குப் பின் ஆச்சிக்குப் புதிய படங்கள் 'புக்' ஆகவில்லை. ஏற்கெனவே ஒப்பந்தம் செய்யப்பட்ட படங்கள் சிலவற்றிலிருந்தும் 'நமக்கேன் வம்பு' என்று அவரை நீக்கிவிட்டார்கள். அவர் பங்கேற்ற டீ.வி விளம்பரங்களைக் கூட நிறுத்தி விட்டார்கள். இந்தச் சூழலில் ஆச்சியின் பேச்சை மனத்தில் வைத்துக் கொள்ளாமல், தமது படத்தில் ஒரு முக்கியமான ரோலை ரஜினியே ஆச்சிக்குக் கொடுத்து, மனக்கசப்புக்கு முற்றுப் புள்ளி வைத்தார். ரஜினியின் மனித நேயம் அது.

'இத்தனை வெற்றிகளுக்குப் பிறகும் அதன் பாதிப்பு ஏதுமின்றி எப்படி உங்களால் சாதாரணமாக இருக்க முடிகிறது?' என்று பிரசாத் லேப் அதிபர் ரமேஷ் பிரசாத், ரஜினியிடம் கேட்டபோது நானும் கூட இருந்தேன்.

''இந்தப் பணம், பேர், புகழ் எல்லாமே ஆண்டவன் போட்ட பிச்சை. இதில் என்னுடைய பங்களிப்பு ஏதுமில்லை. அப்படி இருக்கிறபோது வெற்றி குறித்து கர்வப்பட எனக்கு என்ன தகுதி இருக்கிறது?'' என்று ரஜினி அளித்த பதிலைக் கேட்டு ரமேஷ் மட்டுமல்ல, நானும் வியப்படைந்தேன்.

ரஜினிகாந்த் ஓர் அசாதாரணப் பிறவி!

(வளரும்)

# அஜித் – சிம்ரனுக்கு வோட்டு!

**ப**ட்டுப் புடைவையும் ஃபேடட் ஜீன்ஸூம் "ஹாய்" சொல்லிக் கொண்டு கை கோத்தால் எப்படியிருக்கும்? அப்படித்தான் இருந்தது அந்த விழா!

எழுபத்தைந்து வருட வரலாறு கொண்ட அண்ணாமலை பல்கலைக் கழகமும், ஃபேஷன், டெக்ஸ்டைல் - இன்டீரியர் டிசைனிங் படிப்புகளுக்கென்று புகழ் பெற்ற தனியார் நிறுவனமான நிஃப்ட் (NIFD)டும் ஒன்றிணைந்து, ஃபேஷன் கடலில் முக்குளித்து முத்தெடுக்க நினைக்கும் மாணவர்களுக்கென்று டிகிரி, டிப்ளமோ கோர்ஸூகளை புதிதாக ஆரம்பித்திருக்கின்றன.

இதன் தொடக்க விழா சென்ற வாரம் சென்னையில் நடைபெற்றபோது விழா வளாகமே ஜிலுஜிலுவென இருந்தது. மையப்புள்ளியாக மிஸ் இந்தியா 2005 சிந்தூரா - மிஸ் எர்த் 2005 நிகாரியா சிங் இருக்க மாடல்கள், மாணவிகள் என இளமைத் திருவிழா களை கட்டியது.

நிலவிய கிளாமர் சூழலில் தனித்துத் தெரிந்தார் விழா நாயகனான அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் வெங்கட்ரங்கன். "டெக்னாலஜியை சாதாரண மாணவர்களுக்கும் கொண்டு சேர்க்கவே இந்தக் கூட்டணி" என்றார்.

ரம்மியமான மாலைப் பொழுதில் குதூகலித்துக் கொண்டிருந்த நிஃப்ட் மாணவர்களிடம் பேச்சுக் கொடுத்தோம்.

"**ஃபே**ஷன் படிக்கிறவங்க எல்லாருமே இஷ்டப்பட்டுதான் வந்திருக்கோம். வெறுமனே ஆர்வத்தோட உள்ளே நுழையற நாங்க, நாளடைவுல வண்ணங்கள், அதன் கலவை, டெக்ஸ்டைல் டிசைனிங், துணிகளின் தரம், யாருக்கு என்ன உடை, கலர் பொருந்தும்... என்று எங்க அறிவை வளர்க்கறது பிரமிப்பான விஷயம். இதுல சர்வதேச டிசைன்கள் பற்றிய கருத்தும் நாங்க சொல்லணும். சூப்பர் இல்ல?" என்று மடை திறந்த வெள்ளமாய்ப் பேசுகிறார்கள்.

"தமிழ்நாட்டில் யார் எந்த உடை அணிந்தால் மிளிர்வார்கள்?" என்றதற்கு

"சிம்ரன், அஜித் எந்த உடையிலும், அம்சமா இருப்பாங்க" என்று பதில் வருகிறது.

மாணவி ஒருவர் வடிவமைத்திருந்த உடையில்,





• நிகாரியா சிங் - சிந்தூரா

கிளாமர் சற்று தூக்கலாக இருக்கவே அதைக் கண்ட ஒரு பெரியவர், ''ஏம்மா, இதையெல்லாம் பப்ளிக்கா போட்டுட்டுப் போக முடியுமா? நாகரிகம் வளர வளர உடையின் அளவும் குறைஞ்சுட்டே போகுதே'' என்று கவலையோடு கேள்வி எழுப்பினார்.

''உலகமயமாக்கல் மூலமா இந்தியாவுல நிறைய மாற்றம் ஏற்பட்டிருக்கு. அதன் அடையாளம்தான் இது. உடைகளில் மேற்கத்திய பாணியைப் பின்பற்றினாலும் மனதளவில் என்றும் இந்தியப் பெண்ணாகவே வாழ்வோம்'' என்று பதிலளிக்க, மற்ற மாணவிகளும் இதை ஆமோதித்து தங்கள் வெஸ்டர்ன் லிப்ஸ்டிக் வழியே இந்தியப் புன்னகையைப் படர விட்டனர்.

- சநகன்

படங்கள்: ஸ்ரீஹரி



• ஃபேஷன் கூட்டணி!



• ''முன் வைச்ச காலை... பின்னே எடுக்க மாட்டோம்''

# மகத்தான திருப்பணி!

ஸ்ரீ கிருபானந்தவாரி அவர்களைப் பற்றியும், அவர்களுடைய சொற்பொழிவாற்றலைப் பற்றியும், வடலூரில் அவர்கள் இயற்றியுள்ள சத்திய ஞான சபைத் திருப்பணியின் மகிமை பற்றியும் அறிந்திராத தமிழர் யாரும் இருக்க முடியாது. வடலூரில் திருப்பணி முடிந்து கும்பாபிஷேகம் நடந்தபோது, சுமார் பதினைந்து லட்சம் ஜனங்கள் குழுமியிருந்தார்கள்.



வடலூரில் அவர்களுடைய மகத்தான திருப்பணியைப் பார்க்கும் பேறு, சென்ற ஆண்டிலேதான் எனக்குக் கிடைத்தது.

அவதார புருஷரான ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் ஜோதியுடன் கலந்த புனிதமான ஸ்தலத்தில் கம்பீரமாக எழுந்து நிற்கும் சத்திய ஞானசபையில் மூன்று மணி நேரம் இருந்தேன். இந்த மூன்று மணி நேரமும் "ஸ்ரீ கிருபானந்தவாரி என்கிற ஒரு தனி மனிதர் இவ்வளவு மகத்தான திருப்பணியை எப்படிச் செய்து முடித்தார்?" என்று வியப்பிலேயே சென்றுவிட்டது.

பின்னர் ஸ்ரீ கிருபானந்தவாரியார் செய்துவரும் மற்ற பணிகளையும் நன்கு தெரிந்து கொள்ள வேணும் என்ற ஆவல் உண்டாயிற்று. அவர் வெளியிட்டு வரும் "திருப்புகழமிருதம்" என்னும் மாத இதழ், கந்தரனுபூதி, கந்தரலங்கார விரிவுரைகள், கம்பன் கவிமணிகள், சிந்தனைத்தேன் முதலிய நூல்களைப் பார்த்தேன். இவற்றையெல்லாம் பார்க்கப் பார்க்க "ஸ்ரீ கிருபனாந்தவாரியார் ஒரு தனிப்பட்ட மனிதர் அல்ல. அவரே ஒரு பெரிய ஸ்தாபனம்' என்று முடிவு செய்ய வேண்டியதாயிற்று.

தமிழ்நாட்டில் சொற்பொழிவாற்றல் மிக்கவர்கள் பலர் முன்னும் இருந்தார்கள். இப்போதும் இருக்கிறார்கள். அவர்களில் பலருடைய சொற்பொழிவுகளை நான் கேட்டிருக்கிறேன்.

அவர்களில் யாரையும் இணை சொல்ல முடியாவண்ணம், ஸ்ரீ கிருபானந்தவாரியாரின் சொற்பொழிவுவாற்றல் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்ததாக விளங்குகிறது.

அரசியல் ஆவேசம், இனப் பகைமை, சாதித்துவேஷம், மொழிப் பூசல், பணக்காரர் மீது போர் முழக்கம், மோனை, எதுகை, அடுக்கு மொழித் தொடர் ஆகியவற்றின் துணை கொண்டு, ஆயிரக்கணக்கான மக்களின் முன்னால் பேசி ஆரவாரம் உண்டாக்கக்கூடிய சொற்பொழிவாளர்கள் தமிழ்நாட்டில் பலர் இருக்கிறார்கள்.

அவர் சமய தத்துவங்களைப் பற்றிப்

# அமரர் கல்கி

பேசுகிறார்; இறைவன் திரு வருளைப் பற்றிப் பேசுகிறார்; பழைய புராண இதிகாசங்களைப் பற்றிப் பேசுகிறார்; ஒழுக்க நெறியைப் பற்றிப் பேசுகிறார்.

ஆவேசத்துக்கு இடம் கொடாத இத் தகைய பொருள்களைப் பற்றி யாவருக்கும் எளிதில் விளங்கக்கூடிய 'பாமர'த் தமிழ் நடையில் பேசுகிறார்.

ஆயினும் மூன்று மணி நேரத்துக்கு மேலே பதினாயிரக்கணக்கான மக்கள் மெய் மறந்து கேட்டுக் கொண்டிருக்கும் படி செய்கிறார்.

ஆங்கிலம் படித்த அறிஞர்கள் தமிழ்ப் புலமை மிக்க சான்றோர்கள், ஏதோ ஓரளவு கல்வி கற்றவர்கள், எழுத்தறிவே இல்லாதவர்கள், பெண்மணிகள், குழந்தை கள் அனைவரும் கேட்டு ரஸித்து மகிழ்ந்து, உள்ளத்தில் பதிய வைத்துக் கொண்டு செல்லுமாறு ஸ்ரீ கிருபானந்த வாரியின் சொற்பொழிவுகள் அமைகின் றன.



தொல்காப்பியத்திலிருந்து பாரதியார் பாடல்வரை ஸ்ரீ கிருபானந்தவாரியார் ஆராய்ந்து அறியாத சிறந்த தமிழ் நூல் எதுவும் இல்லை.

சிலேடைகள், அடுக்குமொழிகள், மோனை எதுகைகள் அவருடைய சொற் பொழிவுகளில் வந்தால், அவை நகைச் சுவை கலந்த பரிகாசத்துக்காகவே இருக் கும். பிரமிப்பு ஊட்டுவதற்காகவோ, ஆவேசம் உண்டாக்குவதற்காகவோ இராது.

அவருடைய சொற்பொழிவுகள் பாக வதர்கள் செய்யும் கதா காலட்சேபத்தைப் போல், நவரஸங்களும் கலந்து நேரம் போவதே தெரியாமல் ரஸிக்கக்கூடியன வாக இருக்கின்றன.

ஆனால் காலட்சேபம் செய்யும் பாக வதர்கள் கதைகளைச் 'சிட்டை' செய்து கொண்டு ஓரிடத்தில் சொல்லியது போலவே மற்ற இடங்களிலும் சொல்லிக் கொண்டு போவார் கள்.

ஸ்ரீ கிருபானந்த வாரியாரின் நான்கு சொற்பொழிவுகளை சமீபத்தில் கேட் கும்படி நேர்ந்தது. ஒன்றிலே சொன்ன பொருளை இன் னொன்றில் அவர் சொல்லவில்லை. ஒவ்வொரு சொற் பொழிவிலும் புதிய புதிய பொருள்களும், புதிய புதிய உவமை களும் போட்டியிட் டுப் பொங்கி வந்தன.

தமிழுக்கும், தமி ழர் பண்பாடு உயர் வதற்கும் ஸ்ரீ கிரு பானந்தவாரியார் செய்யும் தொண்டு மிக மேன்மையானது. நமது பழம்பெரும் சமய நெறிகள் தழைத்தோங்குவதற்கு அவர் செய்யும் தொண்டினை மதிப் பிடவே முடியாது."

– 'யார் இந்த மனிதர்கள்?' லிருந்து
வானதி பதிப்பகம்

# மிளகுவளை மர்மம்!

அழகிய அரேபிய அடிமைப் பெண்கள் தம் கால்களை இதமாகப் பிடித்து விடுவது போல இன்பக் கனா கண்டு கொண்டிருந்த எழுத்தாளர் சங்கமித்ரனை, அலாரம் உகப்பி எழுப்புகிறது. கனவு கலைக்கப்பட்ட கடுப்புடன் படுக்கையில் புரள்கிறார். ''என்ன அவசரம்? எழுதறதை நாளைக்குப் பாத்துக்கலாம். இன்னும் கொஞ்சம் தூங்குங்களேன். மழை கொட்டறது.'' மனைவி மாலதியின் கரிசனக் குரல், அவரது முதுகை மெத்தென்று தாயின் கையாகத் தட்டுகிறது.

'இன்றைக்கு எழுதி முடிக்கணும்' என்கிற நிர்ப்பந்தம் நினைவுக்கு வர சங்கமித்ரன் விருட்டென்று எழுந்து உட்காருகிறார்.

''அஃபீஷியலா எழுந்தாச்சா?'' புன்னகையுடன் மாலதி அவர் கடாசிய போர்வையை நீட்டாக மடித்து வைக்கிறாள். தலையணையைச் சரி செய்கிறாள். கொசுக்களை விரட்டும் விளக்கை அணைக்கிறாள். மூக்குக் கண்ணாடியை புடைவைத் தலைப்பால் துரிதமாக பாலிஷ் செய்து நீட்டுகிறாள். "நீங்க கேட்ட மின்ட் ஃப்ளேவர்டு ஜெல் பேஸ்ட்டை வாங்கியாச்சு. பிரஷ்லே போட்டு பாத்ரூமிலே ரெடியா வெச்சிருக்கேன். அப்பா! நல்ல மழை. குளிருமேன்னு பல் தேய்க்க பக்கெட்டிலே வெந்நீர் விளாவி வெசசிருக்கேன். செப்பை மாத்தியாச்சு. பாத்ரூம் சப்பல் வெளியிலே வெச்சிருக்கு.''



காலைக் கடன்களை முடித்து

ஜே.எஸ்.ராகவன்



வெளியே வரும் கணவனுக்கு, முகம் துடைக்க டிடெர்ஜன்ட் சலவை மணக்கும் டவல் ரெடி. சோபாவில் அவர் வந்து உட்கார, மணக்கும், ஆவி பறக்கும் காப்பியை, டபராவுக்கும் டம்பளருக்குமாக ஆற்றி, ஆற்றி, குடிக்கும் சூடு வந்துவிட்டது என்று அனுமானித்த நிலையில், அவரிடம் டம்ளரை நீட்டுகிறாள். பஜ்ஜி போடுவதுபோல் காப்பியில் தோய்த்துத் தின்ன இரண்டு மாரி பிஸ்கெட்டுகள் அருகில் ரெடி.

''அதோ டோர்பெல். பேப்பர் வந்தாச்சு. நீங்க இருங்க. கொண்டு வர்றேன்.''

குவியலாக, அழிந்த கலர்க் கோலமாக வராந்தாவில் இறைந்து கிடக்கும் ஆங்கில, தமிழ் தினசரிகளை

சங்கமித்ரன் படிக்க விரும்பும் வரிசையில் அடுக்கி வைத்து, குறிப்பெடுக்க வசதியாக பக்கத்திலேயே சிவப்பு பால் பாயிண்டு பேனாவையும், சிறிய நோட்டையும் வைத்து தலை நிமிர்கிறான்.

''ஃபான் ஸ்பீடைக் குறைச்சுடட்டுமா? பேப்பரைப் பிரிக்கும்போது பறக்குமே? இம்சையா இருக்குமே?''

செய்தித்தாள்களை அலசும்போது அடிக்கடி எட்டிப் பார்த்து, அவர் படித்து கீழே அலட்சியமாக வீசிய பேப்பர்களைத் திரட்டி, நீவி, மடித்து சென்டர் டேபிள் கீழ் தட்டில் அடுக்கி விட்டுப் போகிறாள்.

"மணி எட்டாகிறது. குளிக்கறீங்களா? ஹீட்டர் ஆன் பண்ணியிருக்கிறேன்.''

குளித்து அணிய அவரது உள்ளாடைகள் பாத்ரூமில் ரெடி. குளிக்கும்போது மணி அடித்தால் எடுத்துப் பேச கார்ட்லெஸ், செல் ஃபோன்கள் குளியலறையில் ஷவரின் வீச்சுக்கு அப்பால் உள்ள ஷெல்பில் தயார் நிலையில் வைக்கப்பட்டு இருக்கின்றன.

பாத்ரூமுக்கு நுழையுமுன் சங்கமித்ரன் நாள்காட்டியைப் பார்க்கிறார்.

''இன்னிக்கு சனிக்கிழமை. நீங்க நீலக் கலர் போட்டுக்கறது. பெட் மேலே நீல ஷர்ட் ரெடியா வெச்சிருக்கேன்.''

உடை அணிந்து வெளியே வரும்போது, பூஜை ரூம் தயாராக இருக்கிறது. கறுப்பு கிரனைட் தரை மேல் பிள்ளையார் சுழி. ஸ்ரீராம ஜெயம். எட்டு புள்ளிக் கோலம். தகதக என்று துலங்கும் காமாட்சி விளக்குத் திரி விளிம்பில் பாலே ஆடும் தளிர் சுடர் நடன சுந்தரி.

கும்மென்று தசாங்கம், ஊதுவத்தி, மரிக்கொழுந்து, செண்பகப்பூக்களின் வாசனைக் கதம்பம். ஸ்வாமி படங்களை ஜாதி மல்லிச் சரத்துண்டுகள் பளீரென்று அலங்கரிக்கின்றன, சரஸ்வதி சிலை வடிவில் மஞ்சள் சாமந்தி மாலை அணிந்து, ஆப்பிள், திராட்சை, கற்கண்டு நைவேத்தியங்களை ஏற்று அருள் புரியத் தயாராகக் காத்திருக்கிறாள். "எனக்கு?" என்று குறும்புடன் கேட்பது போல மாயையைத் தோற்றுவிக்கும் தவழும் குட்டிக்கண்ணன் விக்ரகத்தின் முன்னால் கிண்ணத்தில் வெண்ணை உருண்டை.

'நீங்களா? நானா?' என்று கேள்வியாக மாலதி அவரைப் பார்க்கு முன்னே, 'நீயே பூஜையைச் செய்துவிடு' என்று சங்கரமித்ரன் சின்னதாக சிக்னல் செய்ய, மாலதி வெள்ளி மணியை கிணுகிணுவென்று அடித்து நைவேத்தியம் செய்து கற்பூரம் காட்டுகிறாள். எலக்ட்ரானிக் சக்தியால் 'ஓஓஓஓ....ம்ம்ம்' என தீர்க்கத்துடன் முழங்கிக் கொண்டிருக்கும் கருவியை, வலது ஆள்காட்டி நடு விரல்களால் கன்னத்தில் போட்டுக் கொண்டு விட்டு நிறுத்துகிறாள்.



''கால்ல அரிப்புனு சொன்னா தொப்பையைக் குறைக்க மருந்து தர்றீங்களே... எதுக்கு டாக்டர்?''

''குனிஞ்சு சொறிய தொப்பைதானே இடைஞ்சலா இருக்கு!''

- அம்பை தேவா

காலை உணவு தயார். ஆவி பறக்கும் இட்லி, தேங்காய் சட்னி, சின்ன வெங்காய சாம்பார், எள்ளு போட்டுத் தயாரித்த மிளகாய்ப் பொடி, நல்லெண்ணெய், உருகிய நெய், நெஞ்சு கரிக்காமல் இருக்க சுவையூட்டப்பட்ட யோகர்ட் குட்டி ஸ்பூன். இரண்டு நுனி

களிலும் நறுக்கி சுத்தப்படுத்தப்பட்ட பெங்களூர் எலய்ச்சி வாழைப்பழம்.

உண்ண உட்காரும்போது வாசல் அழைப்புமணிப் பட்சி, 'கிக் - கிக் - கிக்' என்று சப்திக்கிறது.

"இதோ நான் போய்ப் பார்க்கிறேன்'' மாலதி விரைகிறாள்.

பேப்பர் போடும் விநாயகம்.

டெலிவிஷன் மேல் தயாராக வைத்திருக்கும் ரூபாய் நோட்டுகளைக் கொடுத்துவிட்டு, மீதியை உண்டியில் போட்டுவிட்டு மாலதி வருகிறாள். சங்கமித்ரன் கவிழ்த்து வைக்கப்பட்ட தட்டைக்கூடத் திருப்பிப் போட்டுக் கொள்ளாமல் அமர்த்தலாக உட்கார்ந்து இருக்கிறார்.



''நம்ம சீரியல் கதாநாயகி அஞ்சலி அவங்க பேரை மாத்தச் சொல்லி கேட்கிறாங்க.''

''ஏனாம்?''

''நம்ம 'கண்ணீர்' சீரியல் பெயரைச் சேர்த்து எல்லாரும் அவங்களை 'கண்ணீர் அஞ்சலி'ன்னு கூப்பிடறாங்களாம்!''

- என். உஷாதேவி

ஆற அமர இட்லிகளை உள்ளே தள்ளிவிட்டு, பீங்கான் தட்டிலேயே கையை அலம்பி எழுந்திருக்கும் போது, மாலதி கையைத் துடைத்துக் கொள்ள துண்டைத் தயாராக ஏந்தி நிற்கிறாள். உதட்டின் மேல் வியர்வை முத்துகள். டேபிளில் மினி கோப்பையில் டிகிரி காப்பி. சிறிய தட்டில் இரண்டு கிராம்புகள். மூன்று ஏலக்காய்கள், வாசனைப் பல்குத்தி.

"எந்தெந்தத் துணிகளை வீட்டில் துவைக்கணும். எதை லாண்டிரிக்குப் போடணும்னு பிரிச்சி வெச்சிருக்கேன். நீங்க செக் பண்ணணுமா?"

அவள் உரித்துக் கொடுத்த கலர் கலரான மாத்திரைகளை சுகந்த சுபாரியைப் போல மொத்தமாக அள்ளி வாயில் போட்டுக் கொள்கிறார். ஒரு மடக்குத் தண்ணீரில் அவற்றை ஆரோக்கியம் காக்கும் டூட்டிக்கு உள்ளே அனுப்பிவிட்டு, தேவையில்லை என்பதைக் குறிக்க தலையை இலேசாக அசைக்கிறார்.

''சாயந்தரம் கும்பகோணம் போகணுமே. உங்க துணிமணிகளை ஏர் பேக்கில் வெச்சிருக்கேன்'' எடுத்து வைத்த ஐட்டங்களை, இந்தியாவின் ஏற்றுமதிப் பொருள்களை பள்ளி மாணவி ஆசிரியர் முன் யோசித்து யோசித்துக் கூறும் விதமாக நின்று நிறுத்திப் பட்டியலிடுகிறாள். "எதையும் விடலியே?"

சங்கமித்ரன் தலையை ஆட்டிவிட்டு எழுதும் மேஜைக்கு நகர்கிறார்.

"இன்னிக்கு கடைசி அத்தியாயத்தை முடிச்சு அனுப்பணும் இல்லே. எப்படி? டிக்டேட் பண்ணப் போறீங்களா? இல்லே நீங்களே...?''

"இதோ ஒரு நிமிஷம். அடுப்பெல்லாம் அணைச்சிருக்கான்னு பாத்துட்டு வரேன்."

''ம்.''

**"நா**ன் ரெடி. சொல்லுங்க." குலுங்கி சப்திக்காமலிருக்க, மிளகு வளையல்களை மேலேற்றிக் கொள்கிறாள்.

வாழ்க்கையின் தரத்தை உயர்த்தும் சுய-முன்னேற்றப் புத்தகங்களை எழுதிக் குவிக்கும் சங்கமித்ரன் சிந்திக்கிறார்.

ஆவலுடன் மாலதி கேட்கிறாள். "அத்தியாயத்தின் தலைப்பு?''

கண்களை மூடி தொண்டையைக் கனைத்து விட்டு சங்கமித்ரன் சொல்லத் தொடங்குகிறார்.

''தலைப்பு, 'தன் கையே தனக்கு உதவி'. ம், ஆரம்பி... நான்முக பிரம்மன் ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு கைகளைக் கொடுத்திருப்பது...'' ○





# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம்:** சுமாரான வாரம் எதிலும் கவனம் அவசியம். மாணவ, மாணவிகளுக்கு கல்வியில் வெற்றி கிட்டும். வியாபாரிகளுக்கு தொழிலில் சற்று தேக்க நிலை ஏற்படும். பெண்கள் வாக்குவாதம் செய்ய வேண்டாம். உத்தியோகத்தில் வேலை மாறுதல் கிட்டும். தாயாரின் உடல் நிலையில் சற்று நலிவு ஏற்படும். திருமணம் ஆகாத ஆண் பெண்களுக்கு திருமணத் தடை விலகும். சிலருக்கு வெளிநாட்டில் பணி ஏற்படும். சனி/ராகு/குரு வழிபாடு அவசியம்.



**ரிஷபம்:** இந்த வாரம் பொன்னான வாரம். திருமணக் காரியங்கள் கை கூடும். புதிய தொழில் செய்ய நினைப்பவர்கள் தொழில் துவங்கலாம். வீடு, மனை பொருள் சேர்க்கைகள் நேரும். கல்வி பயிலும் மாணவ, மாணவிகளுக்கு விரும்பிய இடத்தில் இடம் கிடைக்கும். பொருளாதாரம் சற்று உயர்வு அடையும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு, பணி உயர்வு கிடைக்கும். சிலர் அன்னிய நாடு செல்வார்கள். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் ஏற்படும்.





**மிதுனம்:** தொட்டது துலங்கும் வாரம். உத்தியோகஸ்தர்களுக்கு இட மாற்றம் ஏற்படும். குடும்பத்தில் திருமணக் காரியம் கை கூடும். வேலை இல்லாமல் இருப்பவர்களுக்கு வேலை கிடைக்கும். வீடு வாகன சேர்க்கை உண்டாகும். வியாபாரங்களில், தொழிலில் சற்று தொய்வு இருக்கும். மாணவமணிகளுக்கு நற்பலன் கிடைக்கும்.





**கடகம்:** திடீர் செலவினங்கள் ஏற்படும். தெய்வபலம் இருக்கிறது. கவலையை விடுங்கள். வாக்குவன்மை மேல் ஓங்கும். குடும்பத்தில் திருமணம் ஆகாத மகன், மகளுக்கு திருமணம் கைகூடும். வியாபாரிகளுக்கு தொழிலில் சற்று தேக்க நிலை ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு இட மாற்றம் காத்திருக்கிறது. மாணவ மணிகள் நற்பலன் பெறுவார்கள். குரு/சனி வழிபாடு செய்யவும்.



**சிம்மம்:** எடுத்த காரியம் வெற்றி, நற்பலன் கிடைக்கும் வாரம். பெண்மணிகள் யாரிடமும் வாக்குவாதம் செய்ய வேண்டாம். கைப்பொருள்கள் மீது கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். திருமணம் ஆகாத ஆண் - பெண்களுக்கு திருமணம் நடக்கும். மாணவ மணிகளுக்கு யோகமான காலம். வியாபாரிகள் எச்சரிக்கையுடன் இருக்கவும். ராகு/கேது/சனி வழிபாடு அவசியம்.

## 8.6.2005 முதல் 14.6.2005 வரை



**கன்னி:** தொட்டது எல்லாம் வெற்றி பெறும் வாரம். வாக்கு, தனம், மேன்மை உண்டாகும். குழப்பம் விலகும். திருமணக் காரியம் கைகூடும். மாணவ மாணவிகளுக்கு வசந்த காலம். கலைஞர்களுக்கு ஏற்றம் காணும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். புதிய தொழில் செய்ய நினைப்பவர் ஆரம்பிக்க ஏற்ற நேரம். கணவன் மனைவி வாக்குவாதம் வேண்டாம். வீடு வாகனச் சேர்க்கை ஏற்படும். குழந்தைகள் வழியில் நல்ல முன்னேற்றம் கிடைக்கும். குரு/ராகு/கேது வழிபாடு சிறந்தது.





**துலாம்:** வெற்றி, பொருள், சேரும் வாரம். பண வரவு காத்திருக்கிறது. திருமணம் ஆகாதவர்களுக்கு திருமணத் தடைகள் விலகி திருமணம் கைகூடும். உத்தியோகத்தில் பணி மாற்றம் காத்திருக்கிறது. தகப்பனார் உடல் நிலை சற்று பாதிக்கும். குழநதைகளால் சந்தோஷம் ஏற்

# பரத்வாஜ் பதில்கள்

**உத்தியோகத்தில் எனக்கு ஏற்பட்டுள்ள வேண்டாத பதவி மாற்றம், பிரச்னைகள் எப்போது நீங்கும்? நிம்மதியாக ரிடையர் ஆக முடியுமா? என் மகன்/மகள் பிரச்னைகள் நீங்கி முன்னேற்றம் கிட்டுமா? - பெயர் வெளியிட விரும்பாத வாசகர், விருதுநகர்**

ஜாதகப்படி 25.5.2005 முதல் சனி தசையில் குருபுத்தி ஆரம்பிப்பதால் இதுவரை இருந்த பிரச்னைகள் தீர்ந்து, பதவி உயர்வு கிட்டும். எதிர்பார்த்த வெற்றி வந்து சேரும். குழந்தைகளுக்கு சுப காரியம் நடக்கும். எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**என் கணவர் கான்ஸரில் இறந்தார். எனக்கு 72 வயது. ஒரே மகனது முதல் திருமணம் டைவர்ஸ் ஆகிவிட்டது. இரண்டாவது மணத்துக்குப் பின் என் நிலைமை மிகக் கஷ்டமாகி விட்டது. உடல்நிலையும் சரியில்லை. என் பென்ஷன், டெபாஸிட் பணங்கள் மகன் பொறுப்பில் உள்ளன. மருமகளால் கெட்ட பெயர் உண்டாகி, என் நிலை கேவலமாகிவிட்டது. என் நிலை எப்போது மாறும்?**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், டாபோடி, புனே**

உங்கள் ஜாதகப்படி உறவு, குழந்தைகளால் நற்பயன் ஏதுமில்லை. கெட்ட பெயர்தான் வரும். மகனுடன் சேர்ந்து வாழ்வது கஷ்டம். உங்கள் ஆயுள் 77 வரைதான். 26.5.05க்குப் பின் பணம் கிடைக்க வாய்ப்பு உள்ளது. சஞ்சலம் தீரும். அமாவாசையில் சிவனை வழிபடவும்.

**என் மனைவி கான்ஸருக்கு சிகிச்சை எடுத்துக் கொள்கிறாள். எங்களுக்கு குழந்தை கிடையாது. மனைவியின் ஆயுள்பாவம் தெரிந்தால் சில முக்கிய முடிவுகள் எடுக்க முடியும். தெரிவிக்க வேண்டுகிறேன். -எம்.ஆர். கோவிந்தராவ், ஸ்ரீரங்கம்**

உங்கள் மனைவியின் ஆயுள்பாவம் 62 வயது. உங்களது சுக்ரதசை ராஜ வைத்திய செலவுகளை ஏற்படுத்தும். துக்கமான காலம் இருக்கிறது. மனதை திடப்படுத்திக் கொள்ளவும்.

**என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? நல்ல வேலை கிடைக்குமா?**

**-கே.எஸ். கிருஷ்ணன், சென்னை - 28.**

உங்கள் மகனுக்கு பிறந்த ஊருக்கு மேற்கில், 3 உடன் பிறந்தவருள்ள படித்த பெண்

படும். வீடு வாசல் சேர்க்கை ஏற்படும். கலைஞர்களுக்கு ஏற்றம் காணும். குரு/சனி வழிபாடு உத்தமம்.

**விருச்சிகம்:** நிதானத்துடன் செயல்பட வேண்டிய வாரம். உறவினரிடம் கருத்து வேற்றுமை, பிரிவு ஏற்படும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் விலக நேரிடும். உத்தியோக முன்னேற்றம் ஏற்படும். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்த ஆண், பெண்களுக்கு சட்டென்று திருமணம் கைகூடும். வியாபாரிகள் நல்ல முன்னேற்றம் காண்பார்கள். குரு வழிபாடு உத்தமம்.

**தனுசு:** எதிலும் நிதானம் அவசியம். வண்டி வாகனத்தில் செல்லும்போது நிதானம் தேவை. குடும்பத்தில் மனக்கசப்பு ஏற்படும். உடல் நிலையில் கவனம் தேவை. உத்தியோகஸ்தர்கள் வேலையை விட வேண்டாம். வியாபாரிகளுக்கு தொழிலில் மந்தகதி தொடரும். கலைஞர்களுக்கு சற்று சுமாரான காலம். இடமாற்றம் ஏற்படும். குரு/சனி/ராகு/கேது வழிபாடு செய்யவும்.

**மகரம்:** எடுத்த காரியம் எல்லாம் வெற்றி தரும் வாரம். தைரியம், தன்னம்பிக்கை ஏற்படும். தெய்வபலம் ஏற்படும். வீடு வாகன சேர்க்கை ஏற்படும். திருமணம் ஆகாத ஆண் பெண்களுக்குத் திருமணம் கைகூடும். உத்தியோகஸ்தர்கள் நற்பலனை அடைவார்கள். கலைஞர்களுக்கு சூப்பர் வாரம். வியாபாரிகள் பொருளாதார மேன்மை பெறும். வெளிநாடு செல்ல நினைப்பவர்கள் புறப்பட தயாராகிவிடுவர்.

**கும்பம் :** நினைத்தது நடக்கும் வாரம். மனக்குழப்பம் இராது. புதிய வேலை

அமைவான். 36வது வயதில் அயல்நாட்டு வேலை முயற்சி செய்தால் கிடைக் கும்.

**என் மகள் ஆசிரியை பயிற்சி முடித்து குறைந்த சம்பளத்தில் வேலை பார்க்கிறாள். எனக்கு வசதி மிகக் குறைவு. அவள் திருமணம் எப்போது நடக் கும்?**

**-வி. வெங்கடாசலம்,**
**விக்கிரமசிங்கபுரம்**

உங்கள் மகளுக்கு 29.3.2006க்குள் திருமணம் நடக்கும். தெற்கு மேற்கு திசையில், தெற்கு பார்த்த வீட்டில் வசிக்கும், ஒரே பெண் உடன்பிறப்புள்ள படித்த வரன் அமையும். உங்கள் மகளுக்கு அரசு வேலை கிடைக் கும்.

**என் மகளுக்குத் திருமணமாகி 3½ ஆண்டுகளாகின்றன. குழந்தை பாக் கியம் எப்போது? பரிகாரம் என்ன செய்ய வேண்டும்?**

**-எஸ். சுவாமிநாதன்,**
**தேரூர், கன்னியாகுமரி**

உங்கள் மகளுக்கு 2006ல், ஆண் குழந்தை புனர்பூசம்/விசாகம்/பூரட்டாதி நட்சத்திரத்தில், வியாழன்/செவ்வாய் கிழமையில் பிறக்கும். பரிகாரம் தேவை யில்லை.

கிடைக்கும். அன்னிய நாடு செல்லும் வாய்ப்பு ஏற்படும். மாணவ மாணவி களுக்கு வெற்றி கிடைக்கும். வியாபாரி களுக்கு தொழில் முன்னேற்றம் ஏற்படும். குழந்தைகளுக்கு சுபகாரியம் கைகூடும். கணவன், மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வண்டி வாகனத்தில் செல்லும்போது ராகு/கேது/குரு வழிபாடு அவசியம்.

**மீனம்:** சுமாரான வாரம். வியாபாரி களுக்கு பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். தொழிலில் இருந்த மந்தகதி விலகும். மாணவ மணிகளுக்கு நற்பலன் கிடைக்கும். திருமணம் நடைபெறாதவர் களுக்குத் திருமணம் கைகூடும். வீடு வாங்கும் யோகம் வரும். குழந்தைகள் பற்றின மனக்கவலை தீரும். குடும்பத்தில் இருந்து வந்த சிக்கல்கள் மறையும். ராகு/ கேது வழிபாடு அவசியம்.

# உள்ளம் துறந்தவன்

அந்த ஆபரேஷன் மிக உன்னிப்பாக மாணவர்களால் கவனிக்கப்பட்டது. மினர்வாவில் அது முதன் முறையாக செய்யப்படுவதால், அதன் ஒவ்வொரு செயலும் பதிவு செய்யப்பட்டது. பக்கத்து அறையிலிருந்து வீடியோ மூலம் மாணவர்களுக்கு நுட்பமாக விவரிக்கப்பட்டது.

"முதல் இன்ஸிஷனைப் பாருங்க... ஸ்கால்பெல் வைத்து நடுமார்பில் திறக்கப்படுகிறது. பைபாஸைப் போலத்தான்..."

"ஸ்ட்ரைக்கர் அரம் வைத்து ஸ்டெர்னம் நெடுக வெட்டப்படுகிறது. பாருங்கள். இதோ பேஷண்டின் இதயத்தை அணுகி, பெரிகார்டியம் ஸ்கால்பெல் வைத்து திறக்கப்படுகிறது. இதை மீண்டும் ரிப்பேர் செய்ய மாட்டார்கள். நிறைய சமயமாகும் என்பதால்... இதோ ஹார்ட் லங் மெஷினில் ட்யூப்களை இணைக்கிறார்கள். அயோர்ட்டா சுப்பீரியர் வீனா காவா இன்ஃபிரியா வீனா காவாவில் இணைக்கிறார்கள்... இப்போது இதயமும் மெஷினும் சேர்ந்து செயல்படுகின்றன. இப்போது ஹீமோஸ்டாட்ஸ் வைத்து க்ளாம்ப் பண்ணுகிறார்கள். இப்போது பேஷண்டின் இதயம், சுவாசம் இரண்டையும் மெஷினே செய்கிறது. இதன்பின் பேஷண்டின் இதயம் வலது ஏட்ரியம் அடிபாகத்தில் வெட்டப்பட்டு, அயோர்ட்டாவும் பல்மனரி ஆர்ட்டரியும் வெட்டப்படுகிறது.

ராகவேந்தரின் களைத்துப் போன இதயம் பெரும்பாலும் நீக்கப்பட்டு, மாற்று இதயத்துக்கு இடம் கொடுத்தது.

அழகேசனின் உடலிலிருந்து நீக்கப்பட்ட இதயம் பத்திரமாகக் கொண்டு வந்து வைத்து தைக்கப்பட்டது. முக்கியமான ரத்தக் குழாய்கள் இணைத்து தைக்கப்பட்டன.

கிளிப்புகளை நீக்கி ரத்தம் பாயச் செய்தனர். முன்பு இரண்டு இதயங்களும் துடித்துக் கொண்டிருக்க, முதலில் அழகேசனின் இதயத்தின் முக்கியமான ரத்தக்குழாய்கள் அயோர்ட்டா பல்மனரி ஆர்ட்டரி பகுதிகள் நீக்கப்பட்டு, ஒரு மாம்பழத்தைப் பறிப்பது போல பறிக்கப்பட்டு, அருகே அசெப்டிக் சூழ்நிலையில் காத்திருந்தது. அதுவரை துடித்துக் கொண்டிருந்தது அழகேசனின் இதயம். மாற்று இதய ஆபரேஷன்களில் இது மிக சோகமான கணம். என்னதான் மூளை அடிபட்டு திரும்ப முடியாத நிலை ரெஸ்பிரேட்டர் மூலம் சுவாச நீடிப்பில் இருப்பதாக சமாதானப்படுத்திக் கொண்டாலும், அந்தக் கணம், துடிக்கும் இதயத்தை நிறுத்தி நீக்கும் கணம். அதன்பின் அதற்கு நாலு மணி நேரத்திற்குத் துடிப்பின் ஞாபகங்கள்தான். உயிருள்ள பறவையை அம்பு கொண்டு எய்வது போல, மிச்சமிருக்கும் நரம்புகளைத் துண்டித்தாலும் பேஸ்மேக்கர் மூலம் அதைத் துடிக்க வைக்கலாம். நான்கு மணி நேரத்திற்குள் மாற்றி விட வேண்டும்.

ராகவேந்தரின் நின்று போன இதயம் அதன் அடிப்பகுதியிலிருந்து பெரும்பாலும் நீக்கப்பட்டது. அழகேசனின் இதயம் மிக அருகில் வைக்கப்பட்டு, தையல் போட்டு அயோர்ட்டா பல்மனரி ஆர்ட்டரிகளுடன் இணைக்கப்பட்டது. அதற்கான தனிப்பட்ட பேஸ்மேக்கர் இணைப்பு



நீக்கப்பட்டபோது, அந்த இதயம் சுருதி சேராமல் வேகமாக அடித்துக் கொள்ளத் துவங்க, டிஃபிர்ரிலேட்டர் வைத்து சிராக்கினார்கள். அழகேசனின் இதயம் ராகவேந்தரின் மார்புக்குள் பயணத்தைத் துவங்கியது. மானிட்டர் உயிர் பெற்றபோது, அதன் குதூகலம் அந்த அறையில் பரவியிருப்பது தெரிந்தது. பாலா கட்டைவிரலை உயர்த்திக் காட்டினார். மாணவர்கள் கை தட்டினார்கள்.

மினர்வாவின் தலைமை டாக்டர் கிருபால் சிங் வெளியே பத்திரிகையாளர்களுடன் பேசினார்.



"இன்று பிற்பகல் இரண்டு மணிக்கு இந்த மருத்துவமனையில் மாற்று இதயம் வெற்றிகரமாகப் பொருத்தப்பட்டது. அமெரிக்காவிலிருந்து வந்த கார்டியோ தோராஸிக் சர்ஜின் டாக்டர் பாலாவின் தலைமையில், மினர்வாவின் டாக்டர் ரெட்டி, ராவ் நிலோத்பல், மித்ரா நாரா யண் முழுவினர் திறமையாகச் செயல் பட்டனர்.

"ரத்த அழுத்தம் சரியாக உள்ளது. பல்ஸ் நார்மல். சீக்கிரமே கண் விழிப்பார். பையாப்ஸி எடுத்துப் பார்த்ததில் நிரா கரிப்பின் அடையாளங்கள் இதுவரை இல்லை. ஒரு வாரத்தில் அவர் வீடு திரும்புவார். ஒரு மாதத்தில் அலுவலகத் துக்குத் திரும்புவார். இந்தியாவின் மாற்று இதய அறுவை சிகிச்சையின் தலை நகர மாக சென்னையும், குறிப்பாக மினர்வா ஆஸ்பத்திரியும் மாறி வருகிறது என்பதில் பெருமைப்படுகிறோம்." சுறுசுறுப்பாக குறிப்பெடுத்துக் கொண்டிருந்த நிருபர் களில் ஒருவர் கேட்டார். "இதயம் கொடுத் தது யார்?"

"சாலை விபத்தில் இறந்துபோன ஓர் இளைஞர்."

"பெயர்?"

"பெயர், மற்ற விவரங்கள் தரவேண் டாம் என்று அவருக்கு நெருக்கமான வர்கள் கேட்டுக் கொண்ட தற்கு மரியாதையாக..."

## நெருக்கமான



"குறைஞ்சது நூறு ரூபா செலவழிச்சா தான் என் காதலி ஒரு மணி நேரமாவது என் கூடப் பேசுவா!"

"அது தான் 'ஃபுல் டாக் டைம்' போல!"

- அம்பை தேவா

வள் மஞ்சரியும் தாய் மீனாட்சியும்... பித்துப் பிடித்தாற்போல் வெறித்துப் பார்த்துக் கொண்டு வீட்டில் உட் கார்ந்திருந்தாள். உறங்கவில்லை, யாரு டனும் பேசவில்லை. யாராவது போய், "இதோ பாரு மஞ்சு" என்று தோளைத் தொட்டால், அவர்களை அன்னியர் களைப் போல் பாத்தாள். மீனாட்சி அவளருகே தரையில் முழங்கை மேல் தலை வைத்து படுத்திருந்தாள். அழுத கண்ணீர் கார்ப்பெட்டை தொடர்ந்து நனைத்துக் கொண்டிருந்தது. சாயங்காலம் பாலா ஆஸ்பத்திரியிலிருந்து நேராக அவள் அறைக்குச் சென்றார்.

"மஞ்சு, எங்க எல்லாருக்கும் வருத்தம் தாம்மா. ஆனா அழகேசன் இதயம், சுவாசப்பை, லிவர், கார்னியா எல்லாம் வெற்றிகரமா ஹார்வெஸ்ட் பண்ணி அவரால ஆறுபேருக்கு மறுவாழ்வும்மா!"

"நைஸ்! அண்யாவுக்கு சரியாய்டுச்சா" என்றாள்.

"நினைவு வந்துருச்சு. முதல்ல உன் னைத்தான் கூப்பிட்டார். நீ போய் அவர் கூட பேசினா ரொம்ப சந்தோஷப் படுவார்."

"பேசணுமா?"

"எங்களுக்கெல்லாம் நிச்சயம் அந்தப் பையன் விபத்தில் இறந்துபோனதில் வருத்தம் இருக்கு. ஆனா அவனால..."

"சொல்லியாச்சு மாமா. அவரால ஆறு பேர் பிழைச்சிருக்காங்க. ஆனா அவர் போய்ட் டாரே. போகவேண்டிய வயசில்லையே...?"

"இல்லைதான். இட்ஸ் ரியலி ட்ராஜிக். நீ எங்ககூட யு.எஸ் வந்துரு. மஞ்சு, அவனை மறக்கணும் நீ...வரியா?"

"வரேன்."

"அவசரம் இல்லை. காலைல ஆஸ்பத்திரிக்கு வரியா?"

அவருடைய செல்ஃபோன் ஒலித்தது. "நான் புறப்பட றேன்... ஆஸ்பத்திரில கூப்பிடறாங்க..."

மஞ்சரி தனக்கு முன் கொண்டு வைக்

கப்பட்ட உணவை ஏதோ வஸ்துவைப் போலப் பார்த்தான்.

தரையில் அழகேசனின் தாய் சுருண்டு படுத்திருந்தாள். அவளிடம் அதை எடுத்துச் சென்றாள். "அம்மா சாப்பிடுங்கம்மா."

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். "நீ சாப்ட்டியா கண்ணு?"

"சாப்ட்டேம்மா."

"இன்னேரம் ஆபரேசன் முடிஞ்சிருக்குமா?"

"ஆயிருச்சும்மா. எங்கப்பா நலமாயிட்டார்."

"செத்தப்புறம் என்ன ஆவுது கண்ணு. இந்தப் பாவி மகன் எங்க போயிருப்பான்?"

"சொர்க்கத்துக்கும்மா!"

"அங்க புஸ்தகம் எல்லாம் இருக்கும்ல. அவனுக்கு சோறு தண்ணி எதும் வேண்டாம். புஸ்தகம் போதும். எனக்கென்னவோ அவனுக்கு சாவப்போறம்னு தெரிஞ்சிருக்கு. இத்தனை வேகமா இத்தனை புஸ்தகம் படிச்சிருக்கான். முருகன் கனாவில வந்து சொல்லியிருக்கணும். உனக்கு நேரம் பத்தாதுறா மகனே. நீ அல்பாயுசு. படிக்க வேண்டிய புஸ்தகம் எல்லாம் படிச்சுருன்னு."

"அம்மா உங்களுக்கு ஏதாச்சும் படிச்சுக் காட்டிருக்காறாம்மா?"

"திருக்குறள், திருஅருட்பா...

பெத்ததை காட்டியும் சாஸ்தி சந்தோசம் மவனை... அதென்ன பெரிய மனுசன்னு கேட்ட தாய். தப்பு புள்ள, பெரிய மனுசனாக வேண்டாம். நல்லவனா இருந்தா போதும்."

"அதாம்மா உலகத்திலேயே கஷ்டமான விஷயம்."

"........போவுது எம் பிள்ளையை பறிகொடுத்துட்டு உன்னை புள்ளையா ஏத்துக்கறேன் சரியாம்மா?"

"சரி."

நாகரத்தினம்தான் எல்லா ஏற்பாடும் செய்திருந்தார். "அவங்க சாதில பொதைப்பாங்க. அதனால் நம்ம எஸ்டேட்லயே ஒரு நல்ல மூலையா பார்த்து புதைக்க ஏற்பாடு செய்துட்டோம்..."

மினர்வா ஆஸ்பத்திரியிலிருந்து இன்சாஃப் கம்பெனி ஏற்பாடு செய்திருந்த குவாலிஸின் பின்பக்கத்தில், அழகான தேக்குமரத்தால் செய்யப்பட்ட பெட்டியில் அழகேசன் வைக்கப்பட்டான். கண் இமைகள் கார்னியா நீக்கப்பட்டதால் மூடியிருந்தன. அழகான புது வெள்ளைச் சட்டை அணிவிக்கப்பட்டிருந்தான். மார்ட்டிஷியன் மிதமாக ஒப்பனை செய்திருந்தார். உறங்குவது போலத்தான் தோன்றினான். அவன் உடல் உறுப்புகள் தானத்திற்காக நீக்கப்பட்டிருந்தாலும், அது தெரியாதவாறு ஆடைகளால் மூடி மறைக்கப்பட்டிருந்தான்.

"ஆராய்ச்சி மணியை எதுக்காக அடிச்சே?"

"கஜானா காலின்னு கேள்விப்பட்டேன்; அதை வாடகைக்கு விடுவீங்களா மன்னா?"

\- லீலாஜி



பாலா, நாகரத்தினம், மரகதம், விஜி, சரவணன், கல்யாணி, அவள் பெண்கள் என குடும்பத்தில் அனைவரும் வந்திருந்தார்கள். மஞ்சரி முகம் முழுதும் மறைக்கும் கறுப்புக் கண்ணாடி அணிந்து, தலையை மேலாக்கால் போர்த்தியிருந்தாள். மிக மிக மென்மையாக இருந்தாள். மலர் வளையங்கள் நீக்கப்பட்டு எளிய சடங்கின் முடிவில் அழகேசன் புதைக்கப்பட்டான்.

நாகு, "ஐயர்! கல்லறைக்கு இட்டாலியன் மார்பிள்தானே ஆர்டர் பண்ணியிருக்கீங்க...?"

"ஐயர்? எங்கே அவரு! பரமேஸ்வரன்





## ஜோதிகா ஜோக்குக்கு த்ரிஷா சிரிக்கிறாங்க...!
## த்ரிஷா ஜோக்குக்கு ஜோதிகா சிரிக்கிறாங்க!

"ஆபீசுல உங்கள மட்டும் மானேஜர் தூங்கவே விடமாட்டேங்கறாரே...ஏன்?"
"கனவுல த்ரிஷா வந்தாங்கன்னு ஒரு நாள் சொல்லித் தொலைச்சுட்டேன்!"

- அம்பை தேவா

"பொண்ணு பார்க்கிறதுக்கு ஜோதிகா மாதிரி இருப்பானு சொல்றாங்க... நீ ஏன் வேண்டாங்கற?"
"சந்திரமுகி ஜோதிகா மாதிரி இருக்காடா!"

- நாமக்கல் பாலு

வரலையா?"

"அவர் பெரியவர்கூட அங்க இருக்கார்."

"மஞ்சு ஏதாவது சொல்ல விரும்பறியா?"

அவள் தலை அசைத்தாள்.

மெல்ல அவன் உடல் இறக்கப்பட்டது.

'அழக் கூடாது. அழகேசனுக்கு அழுதால் பிடிக்காது.'

அவள் தன் காருக்குத் திரும்பிய போது... ஓர் இளைஞன் மஞ்சுவை நெருங்க... செக்யூரிட்டி ஆசாமிகள், "யாருப்பா நீ? எப்படி உள்ள வந்தே?"

"நான் அழகேசன் நண்பன்ங்க!"

நாகரத்தினம், "வீட்ல வந்து சந்திங்க..." என்றார்.

"இருங்க மாமா, உங்ககிட்ட ஏதாவது அழகேசன் சொன்னாரா? ஏதாவது சொல்ல விரும்பறீங்களா?"

"உங்களை தனியா சந்திக்கணும்ங்க. அவ்வளவுதான்."

"என்ன விஷயம் சொல்லுங்க?"

"தனியா சொல்றனே!"

நாகரத்தினம் இதை தூரத்தில் இருந்து கவனித்து, "மஞ்சு டயம் ஆறதில்ல..."

"இருங்க மாமா. இவருக்கு அழகேசனைத் தெரியுமாம். ஏதோ சொல்லணுங்கறார்."

"என்னய்யா? எதுவா இருந்தாலும்...."

அவன், "அழகேசன் இவங்ககிட்ட கொடுக்கும்படியா ஒரு புத்தகம் கொடுத்திருந்தார்."

"கொண்டு வந்திருக்கீங்களா?"

"இந்தாங்க."

"அட்ரஸ் குடு."

"பரவாயில்லை சார்" என்றான்.

"ம். அதுகூட சரிதான்."

காரிலிருந்து திரும்பிப் பார்த்தபோது அவனை இரண்டு பேர் தள்ளி அழைத்துச் சென்றார்கள். அவன் தோளைக் குலுக்கிக் கொண்டு பின்னால் பார்த்தான் பயத்துடன்.

அந்தப் புத்தகத்தைப் பார்த்தாள்.

**'From Socrates to Sartre என் மஞ்சள் அழகிக்கு இந்த மாதிரி புத்தகங்கள் நீ படிக்க வேண்டும். சிட்னி ஷெல்டன் அல்ல!**

என்றும் உன் அழகேசன்.'

(தொடரும்)

பா.ராகவன்



# 9 எங்கே என் அடையாளம்?

அன்றைக்குத் தேதி, ஆகஸ்ட் 15. வருஷம் 1947. சரியாக அன்றைய தினம் பிறக்கும் கணம், அதாவது நடுநிசி பன்னிரண்டு மணி. அந்த வினாடி தொடங்கி, அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் மொத்தம் ஆயிரத்தியொரு குழந்தைகள் பிறக்கின்றன.

அந்த ஆயிரத்தி ஒருவரில் இருவர் சற்றே விசேஷமான குழந்தைகள். இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்த அந்தக் கணத்தில் சரியாகப் பிறந்தவர்கள். இருவரும் மும்பையில் பிறந்த குழந்தைகள். இதில் ஒரு குழந்தை ஹிந்துக் குடும்பத்தில் பிறக்கிறது. இன்னொரு குழந்தை, முஸ்லிம் குடும்பம் ஒன்றில் பிறக்கிறது.

குடும்பம் எதுவானால் என்ன? இரு குழந்தைகளும் பிறக்கும் ஆஸ்பத்திரி ஒன்றுதான். மும்பையில் ஆரம்பிக்கிற கதை. அதுவும் இரண்டு குழந்தைகள் ஒரே ஆஸ்பத்திரி என்னும் போதே புரிந்திருக்க வேண்டுமே?

ஆமாம். நர்ஸ் ஒருத்தி இரு குழந்தைகளையும் இடம் மாற்றிப் போட்டுவிடுகிறாள். முஸ்லிம் குழந்தை, ஹிந்துக் குடும்பத்தில் வளர்கிறது. ஹிந்துக் குழந்தை அங்கே வளரத் தொடங்குகிறது.

ஒரு சராசரி ஹிந்தி திரைப்படக் கதை போலத் தோன்றுகிறதல்லவா? ஆனால் இது சராசரிக் கதை அல்ல. ஒட்டுமொத்த உலகையும் இந்தியாவின் பக்கம் திரும்பிப் பார்க்கச் செய்த ஒரு மகத்தான நாவலின் தொடக்கம் இது. நாவலின் பெயர் 'மிட்நைட் சில்ரன்'. எழுதியவர் சல்மான் ருஷ்டி.

மிட்நைட் சில்ரன் நாவலின் தொடக்கம் தரும் ஏமாற்றம் தாற்காலிகமானது. ஒரு சௌகரியத்துக்காக இரண்டு சமூகப் பின்னணியுள்ள குழந்தைகளை அவர் படைத்துக் கொள்கிறாரே தவிர, அவரது நோக்கம் அதுவல்ல. அந்த இரு குழந்தைகளில் ஒன்றான சலீம் சினாய் என்கிற குழந்தை, தனக்குச் சில விசேஷமான சக்திகள் இருப்பதை உணர்வதாக ஆரம்பிக்கிறார் ருஷ்டி.




அதென்ன விசேஷமான சக்தி? அந்த நள்ளிரவுப் பொழுதில் பிறந்த 1001 குழந்தைகளுடனும் அவனால் - எங்கே இருந்தாலும் எந்தக் காலத்திலும், எப்போதும் மானசீகமாகத் தொடர்பு கொள்ள முடியும். விவாதிக்க முடியும்.

கலந்து பேச முடியும். அந்த மற்ற ஆயிரம் குழந்தைகளும் கூட, காலத்தின் முன்னும் பின்னும் நகர்ந்து சரித்திரத்தின் எந்தப் பக்கத்தில் நின்று வேண்டுமானாலும் பேச முடியும்.

ஒரு நல்ல காமிக்ஸ் புத்தகத்துக்கான கதைக்கருவாகத் தெரிகிறதல்லவா? ருஷ்டியின் நாவல்களின் மேல்பூச்சு எப்போதுமே இப்படித்தான் இருக்கும். மிக எளிமை போலத் தோன்றும் பாவனையில்தான் அவர்தம் பிரசித்தி பெற்ற சர்ச்சைகளை ஒளித்து வைக்கிறார்.

மிட்நைட் சில்ரன் நாவலில் ருஷ்டி விவாதிப்பது இந்தியாவைப் பற்றி. இந்திய அரசியல்வாதிகளைப் பற்றி. நள்ளிரவில் வாங்கிய சுதந்திரம் எப்போது விடியுமென்கிற கேள்வியைத்தான் ருஷ்டியும் இதில் முன்வைத்திருக்கிறார். சுதந்திர இந்தியா, சுதந்திரத்துக்கு முந்தைய இந்தியா என்று இரு பாகங்களின் வரலாறும் இந்நாவலின் ஓரிழையாக ஓடிக் கொண்டே இருக்கும். சலீம் சினாய் என்கிற ஒரு பாத்திரத்தின் சொந்தக் கதையே போல் விரியும் இந்நாவலில் இந்த வரலாற்று இழை இருப்பதும் தெரியாது. இல்லாதிருப்பது போலவும் இருக்காது. அதுதான் விசேஷம். அதுதான் செய்நேர்த்தி.

ருஷ்டிக்கு புக்கர் பரிசைப் பெற்றுத் தந்த இந்த நாவல், இந்தோ ஆங்கில எழுத்தாளர்களுக்கு சர்வதேச அரங்கில் மிகப் பெரிய செல்வாக்கையும் சேர்த்துப் பெற்றுத் தந்தது என்பதை மறுக்க முடியாது.

ருஷ்டி ஏன் இந்த நாவலை எழுதினார்? அந்தக் கதை நாவலைவிட சுவாரசிய மானது.

சல்மான் ருஷ்டி, இந்தியாவில் பிறந்தவர். மும்பை, பம்பாயாக இருந்த காலத்தில் - அதாவது 1947ம் ஆண்டு ஜூன் மாதம் 19ம் தேதி அனீஸ் முகம்மது என்கிற ஒரு பணக்கார வர்த்தகரின் மகனாகப் பிறந்தார். கொஞ்சநாள் பம்பாய் கதீட்ரல் பள்ளியில் படித்துவிட்டு, தரமான கல்வியை உத்தேசித்து இங்கிலாந்துக்குப் போய்விடார். அப்போது அவருக்கு வயது பதிமூன்றுதான்.

இங்கிலாந்தில் ரக்பி நகரில் இருந்த பள்ளியில் ருஷ்டி சேர்ந்தார். மேற்கத்திய வாழ்க்கை, விரிவான வாசிப்புகள், பல்வேறு தரப்பட்ட மக்கள் உடனான பழக்கம் ஆகியவை ஆசாரமான முஸ்லிம் குடும்பத்துச் சிறுவனான ருஷ்டியை அடியோடு மாற்றின. ருஷ்டி முதலில் நாத்திகர் ஆனார். பிறகு எதெல்லாம் தவறு என்று சொல்லித்தரப்பட்டதோ, அதையெல்லாம் செய்து பார்க்க ஆரம்பித்தார். தமது அடையாளங்களைத் தொலைக்கும் விஷயத்தில் மிகுந்த ஆர்வமுடன் ஈடுபடத் தொடங்கினார். படிப்பை முடித்துவிட்டு ஊர் திரும்ப வேண்டிய காலம் வந்த போது, அவரது ஊர் பாகிஸ்தானாக இருந்தது! அதாவது, ருஷ்டியின் குடும்பம் அப்போது பாகிஸ்தானுக்கு இடம் பெயர்ந்து விட்டிருந்தது.

தாய் வசிக்கும் நாடுதானே தாய் நாடு? பாகிஸ்தான் அவரது இரண்டாவது தாய்நாடானது. காலப்போக்கில் அவரது மனம் இதை ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும். ஆனால் இந்தியா - பாகிஸ்தான்



''நீங்க சுமாரா எத்தனை படத்துல நடிச்சிருக்கீங்க...?''

''உண்மையைச் சொல்லணும்னா ஒண்ணு - ரெண்டு தவிர மத்த எல்லாப் படத்துலேயும் சுமாராத்தான் நடிச்சிருக்கேன்!''

- சீர்காழி வி. ரேவதி

யுத்தம் வந்துவிட்டபோது, ருஷ்டிக்குத் தமது அனுதாபத்தை எந்தப் பக்கத்துக்குக் காணிக்கையாக்குவது என்பதில் மிகப் பெரிய குழப்பம் ஏற்பட்டது.

அடிமனத்தில் அவர் தம்மையொரு இந்தியனாக உணர்ந்தார். ஆனால் தாய் நாடென்பது அவருக்கு பாகிஸ்தானாக இருந்தது. வசித்த தேசமும் இனி வசிக்கப்போகும் தேசமுமோ, இங்கிலாந்து.

தமது சுய அடையாளம் எதுவென்று அவரால் இனம் கண்டு கொள்ள முடியவில்லை. மனத்துக்குள் தவித்துத் தவித்துத் தணிந்தார் ருஷ்டி. அடையாளமிழந்து போவது போலொரு அவலம் உண்டா? தாங்க முடியாமல் தான் அவர் மீண்டும் லண்டனுக்கு ஓடிப் போனார்.

அடையாளங்கள் அவசியமற்ற உலகம். தனக்கென ஒரு புதிய அடையாளத்தை உருவாக்கிக் கொள்ள வாய்ப்புகளையும் வசதிகளையும் ஏற்படுத்தித் தரவல்ல உலகம். ருஷ்டி அப்போதுதான் தம் முதல் நாவலை எழுதினார். கிரமஸ் என்று பெயர். இலேசான அறிவியல் சாயலுடன் எழுதப்பட்ட ஒரு சுமாரான புனைகதை அது.



"நான் அவங்க குடும்பத்துல ஒருத்தர் மாதிரி! வீட்டுக்குப் போனா, கையை நனைக்காம விட மாட்டாங்க!"

"அப்படியா?"

'பம்ப்பில தண்ணீர் அடிச்சுக் குடுத்துட்டுப் போகச் சொல்லுவாங்க!"

- என். உஷாதேவி

ருஷ்டி இந்நாவலை எழுதுவதற்காகவே இந்தியாவுக்கு வந்தார். சுற்றிச் சுற்றி வந்து தகவல்கள் சேகரித்தார்.

அதன் பிறகுதான் எழுத ஆரம்பித்தார். ஐந்தாண்டு கடும் உழைப்பில் பிறந்த நாவல் அது. காந்தியின் படுகொலை தொடங்கி, பங்களாதேஷ் யுத்தம் வரையிலான காலகட்டத்தின் வரலாற்றை நீள விரித்து நடந்து பார்த்தார் ருஷ்டி. கதைக் கருவின் புதுமை, சொன்ன விதத்தில் இருந்த தாளலயம், மாய யதார்த்தச் சித்திரிப்பு லாகவம் என்று அத்தனை அம்சங்களும் பொருந்தி, கைகூடி வந்தன அவருக்கு.

இன்று வரையிலுமே ருஷ்டியின் ஆகச் சிறந்த படைப்பு இதுதான் என்று சொல்பவர்கள் உண்டு. இழந்த தமது அடையாளத்தை எழுத்தில் மீட்டெடுக்கும் முயற்சியில் ருஷ்டி மிகப்பெரிய வெற்றி கண்டிருந்தார்.

ருஷ்டிக்கு இன்னமும் இந்தியா மீது ஒரு மெல்லிய ஏக்கம் உண்டு. தம்மை ஓர் இந்தியனாக நினைத்துப் பார்ப்பதில் சந்தோஷம் கொள்கிறவர் அவர். ஆனால் வாழ்க்கை அவரை ஒரு இந்தியனாக இருக்க விடவில்லை. பாகிஸ்தானியாக அடையாளம் பெற்று, இங்கிலாந்துக்காரராக அறியப்பட்டு, நாடோடியாகக் காலம் தள்ளி, தாடி நரைத்த நாளில் நான்காவது திருமணத்தில் ஓர் இந்தியப் பெண்ணைக் கைப்பிடித்துத்தான் அவர் சந்தோஷப்பட்டுக் கொள்ள முடிந்தது.

தனிவாழ்க்கையிலும், எழுத்து வாழ்க்கையிலும் கூட ருஷ்டிக்கு ஏராளமான தோல்விகள் உண்டு. ஆனால், அவர் பெயர் சொல்வதற்கு ஒரு சிறந்த நாவலை அவரால் தந்துவிட முடிந்திருக்கிறது. மிட்நைட் சில்ரன் வெளியாகி, இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகின்றன. இன்னமும் ஆயிரக்கணக்கில் அந்நாவலின் பிரதிகள் விற்றுக் கொண்டு தான் இருக்கின்றன.

சலீம் சினாய், நாவலெங்கும் தன் அடையாளத்தைத்தான் தேடுகிறான். ருஷ்டிக்கும் அந்த அடையாளம் ஒரு நாவலின் மூலம்தான் கிடைத்திருக்கிறது.

(தொடரும்)

"உங்களோட காதல் உண்மையானதா?"

"ஒருத்தருக்காக ஒருத்தர் என்ன வேணா விட்டுக்கொடுப்பீங்களா?"

"உங்க உயிரையும் தந்து காதலை வாழ வைப்பீங்களா?"

- என்னைத் தேடி வர்ற ஜோடிங்ககிட்ட இந்த மூணு கேள்வியைத்தான் நான் கேட்பேன். மும்பை காலேஜ் நாட்கள்ல நான் காதல் தாதா.

என்னன்னு தெரியாது, ஏன்னு தெரியாது... காதல் மேல எனக்கு அப்படியொரு காதல்.




'மச்சான் நீதான் என் லவ்வ சக்சஸ் பண்ணிக் கொடுக்கணும்'னு ஒருத்தன் சொல்லிட்டான்னா போதும்... என்ன வேணா செஞ்சு அவன் காதல வாழ வச்சுட்டுதான் அடுத்த வேலையைப் பார்க்கப் போவேன். இதனாலயே பல பெற்றோர்கள் என்னை எதிரியா பார்த்திருக்காங்க. காலேஜ் புரொபஸர்ஸ் சிலர் திட்டினாலும் பலர் நல்லது செய்றேன்னு பாராட்டி இருக்காங்க. 'காதல் ரொம்ப உயர்வான விஷயம். உலகமே அதுலதான் அடங்கியிருக்கு'ன்னு நினைச்சித்தான் இந்தப் பணிய நான் பண்ண ஆரம்பிச்சேன். ஆனா ஒரு ஜோடிய சேர்த்து வச்சிட்டு ஒரு வருஷம் கழிச்சுப் பார்த்தா, என் எண்ணமெல்லாம் தவிடுபொடியாகி 'ச்சே... காதல் இத்தன கொடூரமானதா'ன்னு நொந்து போயிட்டேன். அந்த சம்பவத்த இப்ப நெனைச்சாலும் எரிச்சல்தான் வருது.

அவன் என்னோட நண்பன்தான். முஸ்லிம். அவன் லவ் பண்ண பொண்ணு குஜராத்தி. ரெண்டு பேரும் உயிருக்குயிரா பழகிட்டாங்க. வழக்கம்போல எங்கிட்ட வந்து சேர்த்து வைக்கச் சொன்னதும் நான், நண்பர்கள் எல்லாரும் சேர்ந்து உடனடியா அடுத்தகட்ட வேலைல இறங்கிட்டோம். ரெண்டு பேரும் வேறவேற மதம்ங்கிறதால யாராவது ஒருத்தர் மதத்துக்கு இன்னொருத்தர் மாறினாத்தான் திருமணம் பண்ண முடியும்ங்கற நிலைமை. சரின்னு

# காதல்



## காதல் சிறகுகள் 9

**அபிஷேக்**

பொண்ணை முஸ்லிம் மதத்துக்கு மாத்த முடிவு பண்ணினோம். பொண்ணும் ஒத்துக்கிச்சு. ஆனா பெரிய சிக்கல் ஒண்ணு உருவாச்சு. மறுநாள் காலைல கல்யாணம்னு ஏற்பாடுகளையெல்லாம் பண்ணிட்டோம். இன்னைக்குள்ள பொண்ணு மதம் மாறியாகணும். நாங்க இருந்தது மும்பைல. மதம் மாத்தற இடம் இருக்கறது பெங்களூர்ல. ட்ரெயின்லயோ, பஸ்லயோ போனா ஒரு நாளுக்குள்ள திரும்பி வர்றது நடக்காத காரியம். ஒரே வழி ஃப்ளைட்தான். ஆனா அதுக்கும் எங்ககிட்ட காசில்ல. எல்லா ஃப்ரெண்ட்சும் ஒண்ணு கூடி, அவங்க



# முடிச்சு...

வங்க போட்டிருந்த நகையையெல்லாம் கழட்டி அடகு வச்சி பணம் தேத்தி, அந்தப் பொண்ணை ஃப்ளைட்ல பெங்களூர் அனுப்பி, மதம் மாத்த வச்சு, திரும்ப ஃப்ளைட்ல மும்பை வந்து, அடுத்த நாள் சொன்னது மாதிரியே கல்யாணம் பண்ணி வச்சோம். தாலி கழுத்துல ஏறினதும் இனி யாரும் தங்களை பிரிக்க முடியாதுன்ற சந்தோஷத்துல, அதைச் சாத்தியமாக்கின எங்களப் பார்த்து அவங்க கையெடுத்துக் கும்பிட்டாங்க. எங்களுக்குக் கண்ணெல்லாம் கலங்கிடுச்சு.

ஒரு வருஷம் ஓடுச்சு... அவங்களுக்கு குழந்தையும் பொறந்துடுச்சு. குழந்தை பிறந்ததும் ரெண்டு வீட்டு ஆளுங்களும் வர ஆரம்பிச்சுட்டாங்க. சந்தோஷமா குடும்பம் நடத்திட்டு இருந்த தம்பதிங்ககிட்ட இதனால பிரச்னை தலைதூக்க ஆரம்பிச்சது. 'எங்க குல வழக்கப்படிதான் பிள்ளைய வளர்க்கணும்'னு பொண்ணு வீடும், 'இல்லல்ல... எங்க மத வழக்கப்படிதான் குழந்தையை வளர்க்கணும்'னு பையன் வீடும் சண்டை போட ஆரம்பிச்சுட்டாங்க. இது கொஞ்சம் கொஞ்சமா பொண்ணு, பையன்கிட்ட விரிசல ஏற்படுத்த, விரிசல் பிளவாகி ஒத்துப்போகாம ஒரு கட்டத்துல ரெண்டு பேரும் டைவர்ஸ் வாங்கிட்டாங்க. எங்களுக்கெல்லாம் ரொம்ப கஷ்டமா போச்சு. இதுக்கா அத்தன சிரமப்பட்டு நாங்க அவங்கள சேர்த்து வச்சோம்? காதல் இப்படிச் செய்யுமா? இது காதல்தானா? காதல் மேல இருந்த மரியாதை எல்லாம் அன்னிக்கு செத்துப் போச்சு.

அந்த மரியாதையை மறுபடி காதல் மீட்டெடுத்தது ஒரு முதியோர் இல்லத்துல. நான் ஒரு டாக்குமெண்டரி படம் எடுக்க அங்க போயிருந்தேன். ஷூட்டிங்

இடைவேளைல அங்க இருக்கறவங்ககிட்ட பேசிட்டிருக்கும்போதுதான் தெரிஞ்சது. அங்க அன்னிக்குத் திருமணம்னு. யாருன்னு பார்த்தா அறுபத்து நாலு வயசு தாத்தாவுக்கும், அறுபத்திரண்டு வயசு பாட்டிக்கும் கல்யாணம்! 'என்னடா இது கூத்து'ன்னு விசாரிச்சா, மலைக்க வைக்கிற மாதிரி தகவல்களை கொட்டறாங்க. அந்த ரெண்டு பேரையும் பத்து வருஷம் முன்னாடி அவங்க பிள்ளைங்க கொண்டு வந்து இங்க விட்டுட்டுப் போயிருக்காங்க. யாரும் வந்து திரும்பப் பார்க்கவே இல்ல. மெல்ல மெல்ல இந்த ரெண்டு பேருக்கும் ஒரு ரிலேஷன்ஷிப் டெவலப் ஆகியிருக்கு. பரஸ்பரம் தங்களோட சோகங்கள பகிர்ந்துக்க ஆரம்பிச்சு, நல்ல நண்பர்களா மாறியிருக்காங்க. ஒருத்தருக்கொருத்தர் அனுசரணையா பார்த்துக்கறது, உதவி பண்ணிக்கறது, அன்பு செலுத்தறதுன்னு எதையும் எதிர்பார்க்காம பழகியிருக்காங்க. நாலு பேர் பார்த்து தங்களோட அன்பை கொச்சைப்படுத்திடக் கூடாதுன்னு திருமணம் செய்ய முடிவு செஞ்சிருக்காங்க. அவங்க அன்பை மதிச்சு அந்த முதியோர் இல்லமே ஒண்ணா நின்னு நடத்தி வச்சிருக்கு.

அந்தம்மா அவர்கிட்ட, 'நான் உங்களுக்கு முன்னாடியே செத்துப் போயிட்டா ரொம்ப சந்தோஷமா போவேன். ஒருவேளை எனக்கு முன்னாடி நீங்க 'போயிட்டீங்கன்னா நீங்க கட்டின தாலியையோ, உங்களால கிடைச்ச இந்தக் குங்குமத்தையோ சாகற வரைக்கும் இழக்க மாட்டேன். நீங்க இறந்ததும் உங்க உடல்தான் மண்ணுல போகும். உங்க மனசு எங்கிட்டதான் இருக்கும். அப்போ நீங்க வாழ்ந்துட்டு இருக்கறதாத்தானே அர்த்தம்... நான் ஏன் தாலியை இழக்கணும்'னு சொல்லியிருக்காங்க.

ஒரு முறை அந்தம்மா அவருகிட்ட ஏதோ ஒரு புடைவை பிடிச்சிருக்குன்னு சொல்லியிருக்காங்க. அதை மறக்காம ஞாபகம் வச்சிருந்தவரு, முதியோர் இல்லத்துல வேலை செய்றதால தனக்கு மாசா மாசம் கிடைச்ச முந்நூறு ரூபாய கிட்டத்தட்ட இரண்டு வருஷம் சேர்த்து வச்சு அந்தப் புடைவைய அந்தம்மாவுக்கு வாங்கிக் கொடுத்திருக்கார். இதையெல்லாம் கேட்டப்போ எனக்கு உடம்பு சிலிர்த்துடுச்சு. காதல்னா இப்படித்தான் இருக்கணும்னு மனசுல அழுத்தமா பதிஞ்ச விஷயம் இது.

இந்த அதிர்வோடு இருந்தப்பதான் பத்மாவ நான் ஒரு மியூசிக் ஸ்கூல்ல சந்திச்சேன்.

**'சோகத்தைத் தரும் பிரிவுகள் எங்களுக்கு ஏக்கத்தைத் தருது!'**

அவங்க நல்ல வயலினிஸ்ட். நான் அங்க மியூசிக் கத்துக்க போனப்ப, அவங்க அங்க புரோகிராம் பண்ண வந்திருந்தாங்க. பார்த்த உடனேயே இந்த மாதிரி ஒரு பொண்ணுதான் நமக்கு லைஃப் பார்ட்னரா வரணும்னு மனசுல ஒரு முடிச்சு விழுந்துடுச்சு. அவங்கள பத்தி விசாரிச்சேன். தகவல்களை சேகரிச்சேன். ஒரு நாள் அவங்களைப் பார்த்து 'எனக்கு லைஃப் பார்ட்னர்னு ஒருத்தங்க வந்தா அது நீங்களாத்தான் இருக்கணும்'னு சொன்னேன். 'இல்ல, வீட்ல ஒத்துக்க மாட்டாங்க'ன்னு சொல்லிட்டாங்க. அதுக்கப்புறம் அவங்கள பார்க்கவே முடியல. யதேச்சையா ஒரு நாள் சென்னையில ஃபங்ஷன்ல அவங்கள பார்த்தப்ப, மறுபடி என் காதல் துளிர்க்க ஆரம்பிச்சது. ரெண்டு பேரும் பேசிக்கிட்டோம். மும்பையிலேர்ந்து சென்னைக்கு வந்து செட்டிலாய்ட்டதா சொன்னாங்க. போன் நம்பர் வாங்கி வச்சுக்கிட்டேன். தொடர்ந்து அவங்ககிட்ட பேச ஆரம்பிச்சேன். அப்படியே காதல் டெவலப் ஆயிடுச்சு. அந்த நேரம் அவங்க வீட்ல மாப்ள பார்க்க ஆரம்பிச்சாங்க. அப்போ பத்மா, வீட்ல என்னைப் பத்தி சொல்லியிருக்காங்க. என்ன பண்றார்னு கேட்

டப்போ, 'மோகமுள் படத்துல ஹீரோவா நடிச்சிருக்கார்'னு சொல்லியிருக்காங்க. வீட்ல 'இது செட்டாகாது'ன்னு முடிவு பண்ணிட்டிருக்காங்க. சினிமா ஃபீல்டு பத்தி அவங்க தப்பா நினைச்சிருந்ததால அப்படி முடிவெடுத்திருக்காங்க. 'வீட்ல ஒத்துக்கிட்டா மேரேஜ். இல்லன்னா இப்படியே இருந்துடுவோம்'னு முடிவு பண்ணினோம்.



• பத்மா

ஒருமுறை எங்கப்பா இறந்த சேதிய பத்மாகிட்ட போன்ல சொன்னேன். அவங்ககிட்ட நோ ரெஸ்பான்ஸ். 'அப்படியா'ன்னு கேட்டுட்டு சாதாரணமா போனை கட் பண்ணினாங்க. நான் டோட்டல் அப்செட்! 'ஆறுதல் தேடி போன் பண்ணா, இப்படிப் பண்றானே... ஒருவேளை தப்பான பொண்ண செலக்ட் பண்ணிட்டோமோ'ன்னு பயந்துட்டேன். அப்புறம்தான் தெரிஞ்சது நான் போன் பண்ணப்ப, அவங்க பேரண்ட்ஸ் கூட இருந்திருக்காங்க. உண்மை தெரிஞ்சதும் அப்படி நினைச்சதுக்காக நான் ஸாரி கேட்க, தான்தான் தப்பு பண்ணிட்டதா அவங்க என்கிட்ட ஸாரி கேட்க, அன்னிக்கு ஒரே கலாட்டா. இப்படி பிரிவோட அத்தனை வலிகளையும் நாங்க உணர்ந்திருக்கோம். எங்களை ரொம்பவும் தவிக்க விடாம பத்மாவோட பேரண்ட்ஸ் ஒரு கட்டத்துல, எங்க மன உறுதியைப் பார்த்துட்டு கல்யாணத்துக்கு ஒத்துக்கிட்டாங்க.

**உ**ண்மையா சொல்லணும்னா, கல்யாணத்துக்கு அப்புறம்தான் நான் காதலை உணர்ந்ததே. ரெண்டு பேரும் ஒருத்தருக்கொருத்தர் ரொம்ப ஆத்மார்த்தமா, ஆதரவா இருக்கோம். ரெண்டு ஆர்ட்டிஸ்ட் ஒரே வீட்ல இருக்கறதால சில சங்கடங்களும் இருக்கு. அவங்க ப்ரோக்ராம்னு வெளியூர் போறப்போ, நான் ஷூட்டிங் இல்லாம வீட்ல இருப்பேன். நான் ஷூட்டிங் போறப்ப, அவங்க வீட்ல இருப்பாங்க. பிரிவுகள் நியாயமா சோகத்தைத் தரும்னு சொல்வாங்க. ஆனா எங்களுக்குள்ள ஏக்கத்தைத்தான் தருது.

இப்ப எங்களுக்கு அழகான ஒரு பையன் பிறந்திருக்கான். பத்மா கன்சீவா இருந்த இந்த பத்து மாசம்தான், முன்ன எப்பவும்விட அவகிட்ட நான் காதலா இருந்த நாட்கள். இனி இந்தக் காதல் அதிகரிக்குமே ஒழிய, எக்காரணம் கொண்டும் குறையாதுன்னுதான் தோணுது.

யோசிச்சா, காதல்தான் என் வாழ்க்கைல பெரும்பாலான நாட்களை ஆக்ரமிச்சிருக்கு. நண்பர்களின் காதல், என்னோட காதல்னு இதுநாள் வரை இயங்கினவன், இனி என் குழந்தையோட காதலுக்காக உருகப் போறேன். அவன் எட்டி உதைக்கறதும், உச்சா போறதும் மகத்தான தருணங்கள். காதலோட இன்னொரு பாகத்தை எனக்குக் காண்பிச்ச பத்மாவுக்குத்தான் நான் நன்றி சொல்லணும்... கூடவே காதலுக்கும்!

சந்திப்பு : **மு.மாறன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# வலைபாயுதே



# கொக்கு பற! பற!

**சி**றகுகள்: காக்கா, குருவி, கோழி, கொக்கு, வாத்து எப்போதாவது மயில்... தினசரி வாழ்வில் இவை தவிர நம் கண்களில் எந்தப் பறவைகளும் படுவதில்லை. ஆனால் உலகில் உள்ள பல வகைப் பறவைகளின் இறகுகள் இன்ஃபர்மேஷனாக உதிர்ந்து கிடக்கின்றன. www.camacdonald.com/birding/ தளத்தில்! கிவி, எமு, ஸ்கிரீமர், பார்பெட், ரோலர்ஸ் என பல பறவையினங்கள். அவற்றின் அறிவியல் பெயர்கள், புகைப் படங்கள், வாழும் இடங்களின் குறிப்புகள் என 'பற பற' தகவல்களை நிறையத் தருகிறது. எவ்வளவுதான் 'பரபரப்பு' செய்திகளையே படிப்பீங்க. கொஞ்சம் மாறுதலா பற பறப்பு தகவல்களையும் படியுங்க.

**டெ**டௌன் லோட்: தியாகராஜ பாகவதர் பற்றி ஏதாவது தகவல் கிடைக்குமான்னு நெட்ல மேய்ஞ்சிக்கிட்டிருப்பீங்க. மைக்கேல் - ஜாக்சன் சி.டி வேணுமான்னு ஒரு விண்டோ குதிச்சு வரும். உங்க எடையை ஒரே நாள்ல ஒன்பது கிலோ குறைக்கறோம்னு குட்டியா ஒரு விண்டோ குதிக்கும். கடன் வேணுமான்னு ஒரு கடன்கார விண்டோ சம்பந்தமில்லாம வந்து கண்ணடிக்கும். அட இதெல்லாம் பாப்-அப் விண்டோஸ். இந்த மாதிரி தேவையானதைத் தேடுறப்போ, தேவையில்லாம வந்து குதிக்கிற 'பாப்-அப்'களை 'பேக்-அப்' பண்ண registry-cleaner.net/pop.up.blocker.htm ஒரு சாப்ட்வேரை வைச்சுக்கோன்னு இலவசமாத் தருது. எடுத்துக்கிட்டு, தேவையில்லாததைத் தடுத்துக்கோங்க!




**வ**லைப்பதிவு: என் ஜாதி போல
உயர்ந்த ஒரு ஜாதி
இப்பூதலத்திலில்லை
என் மதம் போல் மகத்தான ஒரு மதம்
இச்சகத்தினிலில்லை.
என் மொழி போல் எழிலான
ஒரு மொழி
இவ்வுலகிலில்லை.
ஆனால், என் ஜாதியில்லாத
ஜாதியில்
என் மதமல்லாத மதத்தில்
என் மொழியில்லாத மொழியில்
என்னைவிடச் சிறந்தவர்கள்
எப்படித்தான் பிறந்தார்கள்
என்பதுதான் புரியவில்லை.
நன்றி: சண்முககடப்பையா,
கடயமங்கனா
(mmorthi.blogspot.com - வலைப்பதிவிலிருந்து)

- வலைஞன்

# 6'2"

**நீளம்:** எண்களில் இத்தனை சிறிய தலைப்பா? கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தால், தலைப்புக்குக் கீழே 'இது இவன் உயரம் மட்டுமல்ல' எனும் நீளமான வாக்கியம்! ரசிகனைத் தூண்டில் போட்டு இழுக்கும் இந்த வார்த்தைகளுக்குப் படத்தில் பளீச் ஜஸ்டிஃபிகேஷன். பாசம் வைத்த இரண்டு பேரின் படுகொலைக்குக் காரணமான ஆறு பேரைப் பழி வாங்கும் கதை.

**ஆழம்:** பழி வாங்கும் கதை என்பதை முதல் நாற்பது நிமிடங்களுக்குச் சொல்லி விடாமல், அற்புதமாக கபடி விளையாடியிருக்கும் அறிமுக இயக்குநர் செந்தில்குமாரின் திரைக்கதையில் உள்ளது ஆழம்.

**அகலம்:** கச்சிதமாக நகரும் திரைக்கதையில் கடைசிக் கட்ட காட்சிகள் விஸ்தாரமாகி, பூட்டி வைத்திருக்கும் நம் பொறுமைக்கு வேட்டு வைக்கின்றன.

**உயரம்:** கால்சென்டரில் வேலை செய்யும் டை கட்டிய ஜென்டில்மேனாக நாயகன் சத்தியராஜ். இந்தப் பூனையும் பாயசம் குடிக்குமா என்பதுபோல அமைதியாக அடக்கி வாசித்துவிட்டு, ரசனையான கொலையாளியாக மாறும்போது, சத்தியராஜ் கண்களில் தெரியும். கொலைவெறியில் தீக்குச்சி பற்ற வைக்கலாம்.

**முக்கோணம்:** முக்கோணத்தின் மூன்று புள்ளிகளைப் போல, கொலைகாரர்களின் இரண்டு மகன்களோடு நாயகனின் தங்கையும் பாசமாய் வளர்ந்து விடுகிறார். இதைத் தெரிந்து கொள்ளும் நாயகன் சத்தியராஜ். அந்த மூன்று பேரில் யார் தனது தங்கை என்பதை கண்டுபிடிக்க முயல்வது, தெரிந்த பின்பு அவர் எடுக்கும் முடிவு, முன்னதில் சூப்பர் முயற்சி. பின்னதில் சூப்பர் நெகிழ்ச்சி.

**வட்டம்:** வடிவேலு வாழ்க்கையில் முன்னேற பஞ்சுக்கடையில் சாம்பிராணி புகை போடும் காமெடி மட்டும் கலகலப்பு. இது போன்று முயற்சிக்காமல், ஆபாச நகைச்சுவை என்ற குறுகிய வட்டத்துக்குள் கும்மியடிப்பது என்ன பிழைப்பு?

நீண்ட இடைவேளைக்குப் பிறகு அலுப்புத் தட்டாத துப்பறியும் படம் பார்த்த திருப்தி.

**- விஷுவல்தாசன்**

• ஆவரேஜ்



இன்னிக்கு நாட்டுல கொசுவை விட அதிகமாக இருக்கறது அரசியல் கட்சிங்க தான்னு பேசிக்கறாங்க... அதுலயும் நம்ம ஜிங்காரஜ் ஜென்னையில தடுக்கிவிழுந்தா ஏதாவது ஒரு கட்சி ஆபீசு வாசல்லதான் விழணும்போல... அந்த அளவுக்கு துக்கடா பக்கடா கட்சிங்க பெருகிப் போச்சு.. மூர்த்தி சிறுசுன்னாலும் கீர்த்தி பெருசுன்னு சொல்வாங்களே... அது மாதிரி தம்மாத்துண்டு கட்சியா இருந்தாக்கூட, விடுதலைச் சிறுத்தைகள் மட்டும் வட்ட மேஜை மகாநாடு... சதுர மேஜை மகாநாடு... அப்பா பேரை மாத்தறேன்... ஆட்டுக்குட்டி பேரை மாத்தறேன்னு ஏதாவது பண்ணி பரபரப்பாவே இருக்காங்க.

கட்சி இம்புட்டு பிஸியா இருக்குதே... கட்சி ஆபீசு எப்படி இருக்கும்னு பார்க்கலாமேன்னு, தி.நகரு சின்னய்யா தெரு அதுலதான் திருமாவளவன் எழுதின அடங்க மறு - அத்துமீறு - திமிறி எழு மாதிரியான தடாலடி டண்டணக்கா புத்தகங்களெல்லாம் இருக்கும். ஆனா இப்போ எல்லாம் வித்துடுச்சு(!) போல... அந்த எடத்துல ஒண்ணுமே இல்ல... நாம போன அன்னிக்கு அங்க ஏழெட்டு சிறுத்தைங்க... அதாங்க தொண்டர்கள் உட்கார்ந்து ரொம்ப ஜீரியஸா பேசிக்கிட்டு இருந்தாங்க... ரைட்டு... நம்ம சோலியப் பார்க்க வேண்டியதுதான்னு முடிவு பண்ணி, பக்கத்துல கிடந்த நாற்காலிய இழுத்துப் போட்டு உட்கார்ந்தோம்.... மேட்டரும் ஓரளவுக்கு மாட்டுச்சு. எப்படின்னு கேட்கறீங்களா... எல்லாம் நம்ம பார்த்திபனோட கிவ் அன் டேக் பாலிஸிதான். அதாவது போட்டு... வாங்கறது. அதன் மூலமா என்ன தெரிஞ்

# ஆத்துல ஒரு கால்! சேத்துல ஒரு கால்!

பக்கம் போனா, நெசமாவே கட்சி ஆபீசும் பிஸியாத்தான் இருக்குது... முன்னால கீத்துக் கொட்டகை போட்டிருந்தாலும் உள்ளுக்குள்ள சேர், டேபிளு, டீ.வின்னு கொஞ்சம் பவுசாத் தான் இருக்குது. வாசல்ல இருக்குற கீத்துப் பந்தல்ல, முன்னாடி புத்தக ஸ்டால் மாதிரி போட்டிருப்பாங்க.



• கட்சி அலுவலகமும்...



சதுன்னா, திருமாவளவனுக்கு இப்போதைக்கு ரெண்டே ரெண்டு அஜெண்டாதான் முக்கியம். ஒண்ணு பாப்பாபட்டி கீரிப்பட்டி மேட்டரை விடாம புடிச்சிக்கறது... இன்னொண்ணு

டாக்டர் அய்யாவை விடாம புடிச்சுக்கறது... ஆஹா... என்னமா அரசியல் நடத்துறாங்க இல்ல... இதைத்தான் அண்ணனோட ராஜ தந்திரம்னு வேற திருமாவோட தொண்டர்கள் சொல்லி புளகாங்கிதம் அடையறாங்க.

அப்படியே நைஸா இடத்தை மாத்தலாம்னு வெளில வந்து பார்த்தா, வாசல்ல ரெண்டு மூணு ஆட்டோ... கட்சிக்காரங்க வெளியூர்ல இருந்து வந்திருக்காங்களாம்... அவங்கள்ல ஒருத்தர் கிட்ட பேச்சுக் கொடுக்க, இதுக்குத்தான் காத்துக்கிட்டு இருந்தது மாதிரி பேச ஆரம்பிச்சுட்டாரு... எங்களுக்குள்ள பேசிக்கிட்டதை கொஞ்சம் எடுத்து விடறேன் பாருங்க...

"ஏண்ணே! எத்தனை நாளுக்குத்தான் அண்ணன்(திருமா) ஆத்துல ஒரு காலு... சேத்துல ஒரு காலு வச்சிகிட்டு இருப்பாரு?"





• ...தொண்டர்களும்

"ஏது... அய்யா கூடயே இருந்து மீட்டிங் போடறது... எலக்ஷன்ல அய்யா ஆதரிக்கிற வேட்பாளரையே எதிர்த்து ஆள் நிப்பாட்டுறதை பத்தி கேட்கறீங்களா தம்பி... என்ன செய்யச் சொல்றீங்க... இப்போதைக்கு வேற வழி இல்ல... ஆனா ஒண்ணு தம்பி... இப்படியே அண்ணன் போயிட்டு இருந்தாருன்னா, பேரு கெட்டுப் பூடும் தம்பி!"

திடீரென அவர் நம்மைப் பற்றி விசாரிக்க, நம்ம ஊரு உளுந்தூர்பேட்டை பக்கம்னு சொல்லிவிட்டு, நைஸாக இடத்தை மாத்திக்கிட்டோம்.

ரெண்டு சிறுத்தைங்க விஜயகாந்த் கட்சி ஆரம்பிக்கறது சம்பந்தமா பேசிக்கிட்டு இருக்கவே, அவங்களுக்கு தெரியாம காதை அவங்க பக்கம் திருப்பினோம்.

''தலைவரே! இந்த விஜயகாந்த் என்னமோ கட்சி ஆரம்பிக்கப் போறதா பூச்சாண்டி காட்டுறாரே... நான் நெசமாத்தான் கேக்குறேன்... அவரால நம்ம வடமாவட்டத்துல நமக்கு டேமேஜ் ஏதும் இருக்குமா...?

"அட... என்னப்பா நீ... அத்தைக்காரிக்கு மீசை முளைச்சால்ல சித்தப்பான்னு கூப்பிடணும்? அந்தாளு ஊரா ஊருக்கு டூரு, மாநாடுன்னு நடத்துவாரே தவிர, களத்துல இறங்குற ஆசாமி இல்ல."

'ஆஹா... சரியான ஆளு மாட்டிட்டாருப்பா' என்ற சந்தோஷத்தில் அவரிடம் சென்று மேலும் பேச்சுக் கொடுத்தோம். எப்படித் தெரியுமா...?

"அண்ணே... வர்ற எலெக்ஷன்ல நம்ம அண்ணன் எந்தக் கூட்டணியில இருப்பாரு?'' என்று தூண்டில் போட, ''நான் வெசாரிச்ச வரைக்கும் அண்ணன் அய்யா கூட்டணியில இருப்பாருன்னு தான் தோணுது'' என்று பதிலளித்துவிட்டு ஆட்டோவில் ஏறிவிடுகிறார்... 'அடேயப்பா... அய்யா எந்த பக்கம் வேணும்னாலும் கில்லி அடிப்பாருங்கறதைப் புரிஞ்சிக்கிட்டு, உஷாரா பேசுறாங்கப்பா'ன்னு மனசுல நெனச்சிக்கிட்டு கிளம்பினோம்.

- ஒற்றன்

படங்கள் : ரிச்சர்ட்

# மகா பெரியவரின் மூல மந்திரம்!

பாலக்காட்டிலிருந்து சுமார் 25 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது மயிலாட்டூர். ''மயில் ஆடும் ஊர் என்பதால் மயிலாட்டூர்'' என்கிறார் 78 வயது ராமச்சந்திரன்; ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர். ''ஆனால் இதற்கு மேலார்கோடு என்ற பெயரே இப்போது ஆவணங்களிலும், அஞ்சல் அலுவலகத்திலும் காணப்படுகிறது!''

இந்த மேலார்கோடு தெற்கு கிராமத்தில், ஓர் அழகான பிள்ளையார் கோயில். மிகச் சிறிய கோயிலாக இருந்த இந்தக் கோயிலை முன்புறம் மண்டபம் போலக் கட்டி, வெள்ளைச் சலவைக் கற்கள் பதித்திருக்கிறார்கள். பளிங்குத் தரை வெள்ளை வெளேரென்று மின்ன, பிள்ளையாரின் தங்கக் கவசம் பளபளக்க, முன்னைவிடச் சற்று வசதியுடன் இருக்கிறது சன்னதி. ஓட்டுக் கூரைகள் கூடப் பளீரென்று மின்னுகின்றன.

காரணம் - இந்தக் கோயிலின் குடமுழுக்கு விழா!

குடமுழுக்கு விழாவுக்கான ஏற்பாடுகள் தொடங்கிய மே 7 ஆம் தேதியிலிருந்து, கிராம மக்கள் தங்கள் வீடுகளில் சமையலே செய்யவில்லையாம்! அத்தனை பேருக்கும், கோயிலின் எதிரே, மேடைக்குப் பின்னால், பந்தல் போட்டு விருந்துச் சாப்பாடு! பரிமாறியவர்கள் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களும், பெண்களும் தான்.

தினமும் கலை நிகழ்ச்சிகள். நாதசுரக் கச்சேரி, கேரளச்சேரி சகோதரர்கள். சென்னையிலிருந்து பாடகர் ஆர். கணேஷ் ஒருநாள் மாலையில் பாடி கிராமத்தினரை மகிழ்வித்தார்...



• குடமுழுக்கின்போது...

கோயிலின் முன்புறம் பந்தல் போட்டு யாகசாலை.

குடமுழுக்கு 11 ஆம் தேதி என்றால், 10 ஆம் தேதியே இரவு ஆகம விதி முறைப்படி, மூல விநாயகரைக் கருவறையில் கொண்டு போய் பீடத்தில் வைத்தார்கள். அதுவரை ஓர் உருளியில் பூக்களின் நடுவே ஹாய்யாகப் படுத்திருந்தார் பிள்ளையார்!

இரவு 12 மணிக்குப் புறப்பட்டுப் பக்கத்திலிருந்த கோயில் குளங்களிலிருந்து குடங்களில் புனித நீரைச் சேகரித்து, நள்ளிரவு ஒரு மணிக்கு மேல் யானை மீது அந்தக் குடங்களைச் சுமந்து கொண்டு, மேலார்கோடு கிராமத்துக்கு அதிகாலை நாலு மணிக்கு கொண்டு

வந்து சேர்ந்தது ஒரு குழு.

காலை 6.30 மணி அளவில் மங்கள வாத்தியங்கள் முழங்க, வேத கோஷங்களும், மந்திரங்களும் ஒலிக்க குடமுழுக்கு நடந்தது. கூடியிருந்த கிராமத்து மக்கள் மீது புனிதநீர்





* ஸ்ரீ வல்லப கணபதி

தெளிக்கப்பட்டபோது, அத்தனை பேரும் சிலிர்த்துத்தான் போனார்கள். ஒரு கருடனும் அந்தச் சமயம் பார்த்து மேலே பறக்கவே கூட்டத்தில் பக்திப் பரவசம்!

இந்தப் பிள்ளையாரை 'ஸ்ரீ வல்லப கணபதி' என்கிறார்கள். 'வல்லப' என்றால் பெண் அம்சம் உடைய என்று அர்த்தமாம். அதற்குத் தகுந்தாற்போல், சிலையின் பின்பக்கம் ஒரு பெண் வடிவம் துல்லியமாகத் தெரிகிறதாம். இந்தச் சிலையில் பெண் தெய்வாம்சம் இருக்கிறது என்று நாற்பது வருடங்களுக்கு முன்னால் பிரச்னம் வைத்துப் பார்த்தபோது தெரிந்ததாம். (கோயில் - கடவுள் சம்பந்தமான விஷயங்களை, ஒருவகை சோதிடத்தில் பார்ப்பதற்குப் பெயர் தான் பிரச்னம்!)

எல்லாக் கோயில்களிலும், பிரதான தெய்வத்துக்கு மூல மந்திரம் உண்டு. இந்தக் கோயிலின் வலம்புரி விநாயகருக்கு மூல மந்திரம் எழுதிக் கொடுத்தவர் காஞ்சி மகா சுவாமிகள்!

**- சாருகேசி**

**(ஒரு பாட்டுக்கும், இன்னொரு பாட்டுக்கும் இடையே இருக்கும் இடைவெளியில் கடமுடா, பட் படார், குய்யோ முய்யோ, ங்நொய்... க்க்ரீச் என சகட்டு மேனிக்கு சவுண்ட் எழுப்பி, 'ஸ்லோமோஷன்' வார்த்தைகளால் காதுகளை வறுத்தெடுக்கும் ரேடியோ தாக்கிகளுக்கு... சாரி... ரேடியோ ஜாக்கிகளுக்கு சமர்ப்பணம்)**

*காலை 7.00 மணி*

*கொட்டாவி விட்டபடியே கோயிந்தசாமி, ரேடியோவைத் தட்டுகிறார்...*

**ரேடியோ:** குட்மார்னிங்... குட்மார்னிங்... நீங்க கேட்டாலும், கேட்காவிட்டாலும் உங்க காதுல விழுந்து கொண்டிருப்பது 99.8073438 ரேடியோ பஜ்ஜி. சிலர் ஏற்கெனவே எந்திரிச்சிருப்பீங்க. சிலர் இப்பத்தான் கண்ணோட ஷட்டரை திறந்திருப்பீங்க. சிலர் இன்னிக்கு பல் தேய்க்க உகந்த நாளான்னு பஞ்சாங்கத்துல தேடிட்டிருப்பீங்க. சிலர் பல்செட்டை தேடிட்டிருப்பீங்க. சிலர் பல்வேறு காரணங்களால இன்னிக்கு பல் விளக்க வேண்டாம்னு பலமா முடிவு பண்ணிருப்பீங்க. சிலர் டீக்கடைக் காரர்கிட்ட அக்கௌண்ட் சொல்லிட்டு, பல்லை இளிச்சிக்கிட்டு இருப்பீங்க. நீங்க எல்லாம் பல்லைக் கடிச்சிட்டு இந்தப் பாட்டைக் கேட்க வேண்டாம். ஏன்னா இந்தப் பாட்டை பல்லாவரம் பலராமன் ஊத்தப்பல்லோட உறங்கிக்கிட்டிருக்கிற தன்னோட காதலி பல்லிகாக்கு... சாரி மல்லிகாக்கு மட்டும் டெடிகேட் பண்றாரு... கேளுங்க... கேளுங்க.... இது ரேடியோ பஜ்ஜி... இது பிரேக் இல்லாத வண்டி மச்சி...

("ஏன் பிறந்தாய் மகனே..." பாடல் ஒலிக்க ஆரம்பிக்கிறது)

காலை 8.10, கோவிந்தசாமி தனக்கு வந்த இண்டர்வியூ கார்டை டென்ஷனோடு இண்டு இடுக்குகளில் தேடிக் கொண்டிருக்கிறார்.

**ரேடியோ:** இன்னிக்கு உங்களோட காரியங்களெல்லாம் பொங்கலாகப் போகுதா, தொங்கலாகப் போகுதான்னு 'திங்க்' பண்ணிச் சொல்ல வருது ஜோசிய குயின், வெள்ளை எலி வெள்ளையம்மா...

**எலி:** *(கீச் குரலில்)* கடக ராசிக்காரர்களுக்கு இன்னிக்கு செல்போன் டவர் லிங்க் அடிக்கடி கட் ஆகும். சிம்ம ராசிக்காரங்களுக்கு இன்னிக்கு வண்டியோட முன் டயர் பஞ்சர் ஆகலாம். கன்னி ராசிக்காரங்க, (கோயிந்தசாமி உன்னிப்பாக கவனிக்கிறார்) இன்னிக்கு மௌன விரதம் இருக்கிறது உத்தமம்.

(டென்ஷனாகிறார் கோயிந்தசாமி)

*காலை 8.50*

*தன் பைக்கில் கிளம்ப எத்தனிக்கிறார் கோயிந்தசாமி.*

**ரேடியோ:** ஹலோ ஹலோ ஹலோ... எங்க போறீங்க? ("அடப்பாவி... போறப்பவே எங்கன்னு கேட்குதே", எரிச்சலடைகிறார் கோயிந்தசாமி) எங்க போறதா இருந்தாலும், நீங்க இருக்குற ரூம்ல இருந்து பக்கத்து ரூமுக்குப் போறதா இருந்தாக்கூட, சிட்டில எங்கெங்க டிராபிக் இருக்குன்னு கேட்டுட்டுப் போங்க... அண்ணா சாலைல நடுரோட்டுல ஒரு லட்டு உடைஞ்சு கிடக்கு. அதை எறும்புங்க எல்லாம் ஏகாந்தமா ஈட் பண்ணிக்கிட்டிருக்கிறதால, அங்க வாகனங்களை ரூட் மாத்தி விடுறாங்க. அங்க டிராபிக் பன், பட்டர், ஜாம் ஆகிக்கிடக்கு. நுங்கம்பாக்கம் பிரிட்ஜுல ஒரு மெகா சீரியலோட அழுகாச்சி சீன் எடுக்கறதால், அங்க போக்குவரத்தை தடை பண்ணியிருக்காங்க. பாண்டி பஜார்ல, சென்னைல அதிகமான டிராபிக்கை சீர்படுத்தச் சொல்லி எதிர்க் கட்சிக்காரங்க போராடுறதால டிராபிக் பாதிக்கப்பட்டு இருக்கு. இது போக முதல்வர் எந்த ரூட்ல போவாங்க, இன்னும் முடிவாகாததால, மிச்ச சொச்ச இடத்திலயும் போக்குவரத்தை தடை பண்ணியிருக்காங்க. அதனால ஆபீஸ் கிளம்புனவங்க எல்லாம், அப்படியே வீட்டுக்குள்ள போயி ஆனந்தமா கேளுங்க...

# நீங்கள் கேட்டு



# ...ண்டிருப்பது...

கேளுங்க...ரேடியோ பஜ்ஜி... இது பிரேக் இல்லாத வண்டி மச்சி!

('ரெக்கை கட்டி பறக்குதடி அண்ணாமலை சைக்கிள்' பாட்டு ஒடுகிறது)

பைக் ஸ்டார்ட் ஆகாததால் இன்டர்வியூக்கு ஆட்டோவில் கிளம்பிய கோயிந்தசாமி, டிராபிக்கில் மாட்டிக் கொண்டு ஒரு இடத்தில்... ஆட்டோவிலும்...

**ரேடியோ:** நேயர்களே, இன்னிக்கு நம்ம எஸ்.எம்.எஸ். கான்டெஸ்ட்டோட கொஸ்டினை கவனிச்சுக்கோங்க. ஆங்கில எழுத்துக்கள்ல மூணாவதாக வர்ற எழுத்து எது? Option (A) B, Option (B) C, Option (C) D, Option (D) A, இதுல எது கரெக்டான Optionனு எந்தவித அப்ஜெக்ஷனும் இல்லாம 0000-ங்கிற நம்பருக்கு எஸ்.எம்.எஸ். பண்ணுங்க. உங்களுக்காக காத்துக்கிட்டிருக்கு சென்னைல இருந்து 47 கி.மீ. தூரத்துல இருக்குற தூங்கணாம்பட்டி ஸ்ரீமுருகன் டாக்கீஸ்ல ஓடுற 'குலேபகாவலி' படத்துக்கான ரெண்டு டிக்கெட்! உடனே எஸ்.எம்.எஸ். பண்ணுங்க! என்ன ஓஹோவா!

*(இன்டர்வியூ அறையில் கோயிந்தசாமி)*

**கோயிந்தசாமி:** (முழு வால்யூமில்) வ்வணக்கம்ம்ம்ம்! வெளிய போறவங்க எல்லாரும் தொப்பலா நனைஞ்சிருக்காங்க. மழை பெய்யுதான்னு மக்கு மாதிரி கேட்காதிங்க. ஏன்னா வெளியே வெயிலுக்கே வேர்க்கிற அளவுக்கு சூரியன் வொர்க் பண்ணிக்கிட்டு இருக்கு. இந்த நேரத்துல நீங்க ஏசி அறையில உட்கார்ந்து ஓசி டீ குடிச்சிக்கிட்டு இருக்கலாம். ஓசி டிக்கெட்டுல 'காசி' படம் பார்த்துட்டு இருக்கலாம் . காசிக்கு போயிடலாமான்னு ஈஸியா யோசிச்சுக் கிட்டு இருக்கலாம். இல்ல ஈஸி சேர்ல உட்கார்ந்துகிட்டு ஊசில நூலை கோத்துக்கிட்டு இருக்கலாம். என்ன வேண்ணா பண்ணிக்கோங்க, மியூசிக்கை கேட்டுட்டே பண்ணுங்க, "வாய்ல வர்றதெல்லாம் வார்த்தை இல்ல. ஏன்னா ஏப்பம், கொட்டாவி கூட வாய்ல தான் வரும்." இப்படி ஒரு அழகான தத்துப்பித்துவத்தை வரிக்கு பத்து ஸ்பெல்லிங் மிஸ்டேக்கோட எழுதி அனுப்பியிருக்காரு தாம்பரத்தைச் சேர்ந்த தமிழ்வேந்தன். அத்தோட ஒரு கவிதையையும் அனுப்பியிருக்காரு:

"கவிதைக்குத் தெரிஞ்சிருக்கலாம்<br>
தான் கவிதை என்று... ஆனால்<br>
கழுதைக்குத் தெரியுமா<br>
தான் கழுதை என்று!"

இந்தக் கழுதையை ஸாரி... கவிதையை தன்னோட காணாமப் போன ப்ரெண்ட்...

(இன்டர்வியூ எடுப்பவர், இடை மறித்து) "மிஸ்டர் கோயிந்தசாமி உங்களை எங்களோட ரேடியோ ஜாக்கியா தேர்ந்தெடுக்கிறோம்."

**கோயிந்த சாமி:** ஹா... தாங்க் யூ மச்சி!

கற்பனை: **முகில்**



# பச்சைப் பொட்டு!

ஒருவன்




ஆனந்துக்கு நம்பவும் முடியவில்லை. நம்பாமலும் இருக்க முடியவில்லை. ஆனால் அதை அனுபவித்தவர்கள் சொல்லும் போது அவனுக்கும் ஆசை வந்தது. ஆனாலும் ஒரு நாளைக்கு பத்தாயிரம் ரூபாய் என்பது அதிகமாகத் தோன்றினாலும் முடிவில் துணிந்தான்.

அந்த மந்திரவாதி ஆனந்த் கொடுத்த பணத்தை எண்ணிப் பார்த்துவிட்டு, ஒரு சிறிய மாவு உருண்டையை அவனிடம் கொடுத்தான்.

"இந்தா இத விழுங்கிடு... சரியா இருபத்தி நாலு மணி நேரம் கழிச்சு... அதாவது நாளைக்கு இதே நேரம் இங்க... இதே உடம்போட திரும்பி வருவே!"

"இடையில திடீர்னு திரும்ப வர்றதுக்கு வாய்ப்பு உண்டா சாமி?" - ஆனந்த் கேட்டான்.

"ஒரே ஒரு வாய்ப்பு இருக்கு. உன் உச்சந்தலையில பச்சைக் கலர் மையில சின்னதா ஒரு பொட்டு வச்சிருக்கேன். அது பலமா தாக்கப்பட்டா மறு நிமிஷமே நீ இங்க இருப்ப..."

ஆனந்துக்கு ஒரே த்ரில்! இன்னும் சற்று நேரம்தான். தனது பத்து வயது பருவத்தில் தன் குடும்பத்தை, சொந்த கிராமத்தைக் காணலாம். மகிழ்ச்சியுடன் அந்த உருண்டையை வாயில் போட்டு விழுங்கினான். சில நொடிகளில் தன்னையே மறந்தான்.

பத்து வயது ஆனந்த் குதித்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைய, அவனது அப்பா "டேய்... இங்க வா... தங்கச்சிய கிள்ளினியா?"

"இல்லப்பா... அவதான் மொதல்ல... என்னை அடிச்சா." - ஆனந்த் சொல்ல, அவனது அப்பா அருகில் வந்து, "இனிமே அவ ஏதாவது செஞ்சா எங்கிட்ட சொல்லணும். நீ அவள தொடக்கூடாது" சொல்லிவிட்டு ஆனந்தின் தலையில் ஒரு குட்டு வைக்க,

ஒரு லட்ச ரூபாய் ஒரே நிமிஷத்தில் வீணானது!

# லேட்டா வந்தாலும்...



சென்னையின் ஹைடெக் வாழ்வி லிருந்து ஒதுங்கி ஓர் ஓரமாக புழுதி படர்ந்து கிடக்கிறது அலமாதி கிராமம். இங்கிருந்து கிளம்பி சோடாகன் கராத்தே போட்டியில் கதா-குமுதே பிரிவில் தொடர்ச்சியாக ஒன்பது முறை சாம்பி யன்ஷிப் வாங்கியிருக்கிறார் 23 வயது சங்கீதா. இதைவிட மாபெரும் ஆச்சர் யம், இவர் தமது 20வது வயதில்தான் கராத்தே கற்றுக் கொள்ளவே ஆரம் பித்திருக்கிறார். அட!

''அப்பாவுக்கு நான் டாக்ட ராகணும்னு ஆசை. ஆனா அந்தளவுக்கு எனக்கு படிப்பு ஏறலை. "உனக்கு எதுல விருப்பம்? பசங்களைப் பார், எப்படி யெல்லாம் வாழ்க்கையில் முன்னேற ராங்க. மனுசனாப் பொறந்தா ஏதா வது உருப்படியா சாதிச்சுட்டுப் போகணும்'னு ஒரு நாள் என்னி டம் ரொம்ப ஆதங்கப்பட்டு பேசியபோது, நான் சட்டுனு சொன்னேன்.

''அப்பா, கராத்தே கத்துக் கறேன்'' சுவாரஸ்யமாகத் தமது ஃப்ளாஷ்பேக்கை கூற ஆரம்பிக் கிறார் சாதனைப் பெண்.

"டீ.வியில கராத்தே போட்டி களைப் பார்க்கும் போது எனக் குள்ளே இனம் புரியாத ஆர்வம் ஏற்படும். ஆனா அதை வாய் திறந்து சொல்ல இருபது வயசு வரைக்கும் தைரி யம் வரலை'' என்று உற்சாகமாகச் சிரிக் கிறார். இதன் பிறகும் சங்கீதா மலர்ப் பாதையில் ஏதும் பயணிக்கவில்லை. "சட்டுப்புட்டுன்னு ஏதாவது படிக்க வைச்சு கண்ணாலம் கட்டுவியா. இந்த வயசுல கராத்தே அது இதுன்னு'' என்று நாலாபுறமும் எழுந்த வசவுகளை ஒரு வழியாய்ச் சமாளித்து, தமது கிராமத்தி லேயே ராஜா என்கிற மாஸ்டரிடம் கராத்தே பயில ஆரம்பித்திருக்கிறார் சங்கீதா.

"உற்சாகம் ஊற்றெடுக்க மளமளன்னு கராத்தே டெக்னிக்ஸ் எல்லாம் கத்துக்க ஆரம்பிச்சு, இரண்டே மாசத்துல மாநில அளவிலான போட்டியில கதா, குமுதே பிரிவுல மூன்றாவது இடத்துக்கு வந்தேன். அடுத்த இரண்டு மாதத்துல தென்னிந்திய அளவிலான போட்டியில குமுதே பிரிவுல கோல்ட் அடிச்சேன். அவ்வளவுதான் அன்னையிலிருந்து என்னை யாரும் தடுக்க முடியலை'' என்கிறார். சென்ற வாரம் சென்னையில் நடந்த நேஷனல் சாம்பி யன்ஷிப் போட்டியில் இரண்டு தங்கம் வென்று தமிழ்நாட்டுக்குப் பெருமை சேர்த்திருக்கிறார்.

"2008 ஒலிம்பிக்ஸில் கராத்தேவை யும் புதுசா சேர்த்திருக்காங்க. இப்போ தூக்கத்துல கூட நான் ஒலிம்பிக்ஸ்ல தங்கம் ஜெயிக்கறதா கனவு வருது. கூடவே இப்போ நான் ஐ.ஏ.எஸ். பரீட் சைக்கும் முயற்சி பண்ணிட்டிருக்கேன். இரண்டும் சாதிச்ச பிறகுதான் கல்யா ணமே!'' என்கிற சங்கீதாவின் கண்களில் ஒளிக்கீற்று.

- செந்தில்

• நான் கல்யாணத்திற்கு முன்பும் கல்யாணத்திற்கு பிறகும் கூட மனநல மருத்துவரிடம் தொடர்ந்து ஆலோசனை பெற்று மருந்துகள் சாப்பிட்டு வந்தேன். கல்யாணத்துக்குப் பிறகுதான் இது என் கணவருக்குத் தெரியும். இப்போது எங்களுக்குள் விதவிதமான கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டு வருகின்றன. "நீ மனநலத்திற்காக தொடர்ந்து மருந்து சாப்பிட்டதற்கு என்னிடம் ஆதாரம் இருக்கிறது. இதைக் கொண்டே நான் விவாகரத்து கேட்க முடியும். சட்டத்தில் இடம் இருக்கிறது" என்று பயமுறுத்துகிறார். கலக்கமாக இருக்கிறது, உண்மையா?

- எம். குமுதா, திருமங்கலம்.

**டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர்**

மனநல ஆலோசனை பெற்றாலே வியாதி என்று பொருள் அல்ல. அதேபோல தொடர்ந்து மனநல மருத்துவரிடம் சென்று வருவதாலோ, அவர் எழுதிக் கொடுக்கும் மருந்துகளைச் சாப்பிடுவதாலோ, விவாகரத்து கோரிவிட முடியாது. சொல்லப்போனால் உங்கள் மனநலம் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று ஒரு மருத்துவரே சான்றிதழ் அளித்தால்கூட, நீதிபதி அதைக் கொண்டு மட்டும் விவாகரத்து அளித்துவிட மாட்டார். அந்த மனநோயினால் உங்களால் நார்மலான குடும்ப வாழ்க்கையை நடத்த முடியவில்லை என்பது உறுதியானால்தான் மட்டுமே நீதிபதி விவாகரத்தை அனுமதிப்பார்.

• வெயிலின் கடுமை இன்னமும் முடிந்தபாடில்லை. வீட்டிலேயே இருந்தால்கூட உடம்பு ரொம்ப உஷ்ணமாக இருக்கிறது. உடல் வெப்பம் தணிய ஒரு வழி சொல்லுங்களேன்.

- டி. வெற்றிக்கொடி, சென்னை-88.

**எம். ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக்கலை நிபுணர்.**

வீட்டிலேயே மூலிகைக்குளியல் செய்யலாமே. நல்லெண்ணையை இலேசாக சூடுபடுத்தி அதை உடல் முழுவதும் இதமாக மஸாஜ் செய்வது போல் தடவிக் கொள்ளுங்கள். பிறகு வேம்பு, பொடிசாக நறுக்கப்பட்ட வெட்டிவேர்; பன்னீர் ரோஜா ஆகியவை கலந்த தண்ணீரில் குளியுங்கள். இந்தத் தண்ணீரை காலை வெயிலில் ஒரு மணி நேரம் வைத்திருந்து பயன்படுத்தினால் மேலும் சிறப்பு. இப்படிக் குளித்தால் உடல் வெப்பம் தணிவது மட்டுமல்ல, புத்துணர்ச்சியும் பெறுவீர்கள். வாரம் ஒருமுறை இப்படிக் குளித்தாலே போதுமானது.

# சிவந்தால் அபாயமா?



* தைராய்டு பிரச்னை

- பெண்களுக்கான மருத்துவப் பகுதி

• தைராய்டு சுரப்பிக்கும் மாதவிலக்கு சீராக நிகழ்வதற்கும் தொடர்பு

# பாலி க்ளினிக்

உண்டா?

- எஸ். பத்மஜா, விஜயவாடா - 1.

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி மருத்துவர்:**

நிறைய உண்டு. தொண்டைப் பகுதியில் வெளிப்புறமான புடைப்பு என்பது 'காயிட்டர்'தான் என்றால், உடனே தைராய்டு சுரப்பி சரியாக வேலை செய்யவில்லை என்ற கட்டாயமில்லை. வேறு சில பரிசோதனைகளைச் செய்து பார்க்க வேண்டும். தைராய்டு சுரப்பி சரியாக வேலை செய்யவில்லை என்றால் மாதவிலக்குச் சுழற்சியில் சிக்கல்கள் நேர வாய்ப்பு உண்டு.



* படம் : ஸ்ரீஹரி

* என் குழந்தையின் தொப்புள் பகுதி சிவப்பாக இருந்து பார்ப்பதற்கே பயமாகக்கூட இருக்கிறது. என்ன செய்யலாம்?

- சாந்திமணிமாறன், வேலூர்-2.

**டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன், குழந்தை நல மருத்துவர்**

அம்மாவையும் குழந்தையையும் இணைக்கும் தொப்புள்கொடி பிரசவத்தின்போது துண்டிக்கப்படுகிறது என்பது நமக்குத் தெரியும். குழந்தையின் தொப்புள் பகுதி ஆறுவதற்கும் அதிகபடியாக ஒட்டிக் கொண்டிருக்கும் பகுதி கீழே விழுவதற்கும் ஒன்றிலிருந்து மூன்று வாரங்கள் ஆகும். இப்படி ஆறும்போது மெல்லிய திரவம்கூட அந்தப் பகுதியில் சுரக்க வாய்ப்பு உண்டு. தொப்புளைச் சுற்றியுள்ள பகுதி இளஞ்சிவப்பு நிறத்தில் மாறலாம். எனவே இதற்கு பயப்பட வேண்டாம்.

உங்கள் குழந்தையின் தொப்புள் பகுதி சிவப்பாக இருக்கிறதா, இளம் சிவப்பாக இருக்கிறதா என்பதை கவனியுங்கள். குழந்தையின் தொப்புளைச் சுற்றியுள்ள சருமம் பளிச்சென்ற சிவப்பு நிறத்துக்கு மாறியிருந்தாலோ, தொப்புளைச் சுற்றி துர் நாற்றம் வீசினாலோ, அல்லது கொழ கொழவென்ற திரவம் வெளியேறினாலோ டாக்டரிடம் அழைத்துச் செல்லுங்கள். ஏனென்றால் இவை அந்தப் பகுதியில் தொற்றுநோய் ஏற்பட்டிருப்பதற்கான அறிகுறிகளாக இருக்க வாய்ப்பு உண்டு.

குழந்தையின் வயிற்றுப்பகுதியை சுத்தமாகவும், ஈரமில்லாமலும் வைத்துக் கொண்டால் தொப்புள் பகுதியில் தொற்றுக்கிருமிகள் உருவாகவோ பரவவோ வாய்ப்பு இல்லை.

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்**



• மதிப்புக்குரிய மதிப்பெண்!



• சைபர் தந்த சதம்!

● இரா. சக்கரபாணி, மதுரை - 7.

? "தமிழக மக்களுக்கு முதல்வர் ஜெயலலிதா வழங்கும் சலுகைகள் அனைத்தும் 'கார்பைடு மாம்பழங்கள்' போன்றவை" என இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தேசிய நிர்வாகக் குழு உறுப்பினர் ஆர். நல்லகண்ணு கூறியுள்ளாரே?

! சீஸனுக்கு ஏத்த மாதிரி தானே சார் வியாபாரம் பண்ண முடியும்! அதைப் போய் நல்லகண்ணு இப்படி 'நக்கலக்க' லக்க பண்ணக் கூடாது.

● அ. சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21.

? பீஹாரில் ராம்விலாஸ் பாஸ்வானின் செயலை ஜனநாயகப் படுகொலை என்று லல்லு பிரசாத் யாதவ் வர்ணித்திருப்பது எதைக் காட்டுகிறது...?

! சாத்தான் வேதம் ஓதினால் எப்படி இருக்கும் என்பதைக் காட்டுகிறது.

● எஸ்.எம். ஷாஜஹான், நெல்லை - 5.

? 'காதல் செய்ய விரும்பு',

# ஆட்டோகிராஃப் பாடல்

'கற்க கசடற', 'களவும் கற்று மற' போன்ற தலைப்புகளில் வெளிவரும் படங்களைப் பற்றிக் கேட்கும்போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது?

! நியூமராலஜியால் வதைபடாத நல்ல தமிழ்ச் சொற்களைக் கொண்டும் திரைப்படங்களுக்குப் பெயர் சூட்ட முடிகிறதே என்று தோன்றுகிறது.



• இல்லாத தேவை!

● அ.ப. ஜெயபால், பரங்கிப்பேட்டை*

? உண்மையான மதத் தலைவர்களின் அடையாளம் என்ன?

! பிற மதங்களையும் மதிக்கும் மனித நேயராக இருப்பது.

● ஆர். ரங்கநாதன், சென்னை - 17.

? சமீபத்தில் திருச்செந்தூரில் கடல்நீர் உள் வாங்கியது எதனால்?

! செந்தூரில் உள்வாங்கி, குமரியில் கொந்தளித்ததற்கு, ஆஸ்திரேலிய கடலோரப் பகுதியில் ஏற்பட்ட ஆழ்கடல் கடைசலே காரணம் என்று செய்தி வெளியாகியிருக்கிறது.

● என். உஷாதேவி, மதுரை - 9.

? இரு தொகுதிகளில் பெற்ற வெற்றியின் அடிப்படையில் ஒரு கட்சியின் பலத்தை எடை போட முடியுமா?

! முடியும். ஆனால், அவ்வாறு போட்டால் பயமுறுத்தும் என்று தெரிந்துதான் "இரு தொகுதிகளில் தோற்றது ஒரு பொருட்டே அல்ல" என்று அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்கள் தி.மு.க கூட்டணியினர்... தோற்றது அலட்சியத்தால், தோற்கப் போவது அகம்பாவத்தால் என்ற நிலைமை வந்து விடும் - எச்சரிக்கையாக இராவிட்டால்!



* இரட்டைக்....



* ....கொலை!

# ாடமாகிறதே...?

● ரேவதிப்ரியன், ஈரோடு.

? மன்மோகன் சிங் அரசின் ஓராண்டுக் கால சாதனைகளில் உங்களை ஆச்சர்யப்பட வைத்தது எது...?

! 'சாதனைகள்' எதுவும் ஆச்சர்யப்படும் அளவுக்கு இல்லை என்றாலும், அவர் தமக்குத் தாமே மதிப்பெண் போட்டுக் கொள்வதில் காட்டிய நியாயம், நேர்மை, துல்லியம் - இவை அசத்தி விட்டன. நவீன மேலாண்

● டி.கே. சுப்பிரமணியன், பெங்களூர் - 43.

? மத்திய அமைச்சர்களுள் யாருடைய செயல்பாடுகள் திருப்திகரமாக இருப்பதாக எண்ணுகிறீர்கள்?

! '0' டயல் முறையைக் கொண்டு வந்து, மக்களின் எஸ்.டி.டி பில்லைப் போக்கி முதல் மதிப்பெண் பெற்று, அவர்கள் மனத்திலும் நுழைந்துவிட்ட தயாநிதி மாறன் - இன்றைய ஹீரோ!

● எஸ். சக்தி, விக்கிரமசிங்கபுரம்.

? காமராஜர் பல்கலைக் கழக இளங்கலை தமிழ்ப்பாடத்தில் ஆட்டோகிராஃப் திரைப்பாடல் (ஒவ்வொரு பூக்களுமே) சேர்க்கப்படவிருக்கிறதாமே... இது அவசியம்தானா...?

! இலக்கிய ஆழம் குறைவென்றாலும் ஆக்கபூர்வ சிந்தனையைத் தூண்டும் பாடல் என்பதால் ஏற்கலாம் - 'ஒவ்வொரு பூக்களுமே' என்ற இலக்கணப் பிழையைச் சரி செய்த பிறகு.. இதனினும் சிறந்த பாடல்கள் திரைப்படங்களின் வந்துள்ளன என்பதையும் ஆசிரியர்கள் மாணவர்களுக்கு எடுத்துக் காட்டலாம்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? சிலந்தியார் உங்களைக் குதறிவிட்டது பற்றி...?

! குதறவில்லை... அவசரப்பட்டு தப்பான இடத்துல ஒட்டடையைக் கட்டிட்டார். அதையெல்லாம் தட்டி விட்டாச்சுப் போங்க!



* மதிப்புக்குரிய மாஜி!

மையில் இதை self-assessment என்பார்கள். இதைச் சரியாகச் செய்ய முடியாதவர்



* 'நக்கல்' கண்ணு



* திரைப்படப் பாடம்

கள் வெற்றி பெறவே முடியாது.

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8.

*? மேம்பால ஊழல் வழக்கில் நான்கு ஆண்டுகள் கழித்து கருணாநிதி, ஸ்டாலின் முதலானோர் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்துள்ளதே தமிழக அரசு... வருகின்ற சட்டமன்றத் தேர்தலை மனத்தில் வைத்துத்தானே...?*

! ஷ்... அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. சட்டம் தன் கடமையைச் செய்துகிட்டிருக்காக்கும்!

● ஆர்.கே. எப்சிபா, சென்னை - 12.

*? சில மனிதர்களுக்குக் கடவுள் தேவையில்லை என்று கமல்ஹாசன் சொல்கிறாரே...?*

! கரெக்ட்! 'தேவையில்லை' என்று நினைப்பவர்களைத்தான் அவர் முதலில் அரவணைத்துக் காக்கவும் செய்கிறார்.

● சி. கார்த்திகேயன், சாத்தூர் ❐

*? மாஜி அமெரிக்க அதிபர் இந்தியாவுக்கு வந்ததும் நமது நாட்டினர் வரவேற்கிறார்களே... அதிகாரத்தில் இல்லாத ஒருவருக்கு இவ்வளவு வரவேற்பு தேவைதானா...?*

! 'அதிதி தேவோ பவ' - வருகிற விருந்தினரைக் கடவுளாக பாவிப்பது நமது நாட்டுப் பாரம்பரியம். போதாதற்கு கிளின்டன் மனிதநேயப் பயணம் அல்லவா மேற்கொண்டு வந்தார். அவரை வரவேற்பது நமது மகிழ்ச்சிக்குரிய கடமை. முக்கிய அரசுப் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற எவரையும் அவ்வாறு வரவேற்பது உலக வழக்கமும்கூட. துணைப் பிரதமராக இருந்தபோது பாகிஸ்தானைப் 'போட்டுத் தாக்கிய' அத்வானி இன்று மாஜியானாலும் அந்த தேசத்தில் வரவேற்பு பெறுகிறாரல்லவா...

● ஏ. சுகுமார், காட்பாடி.

*? இந்தக் கோடையிலும் தாங்கள் குளிர்ந்தது எதனால்?*

! அண்ணா பல்கலைக் கழக காம்பஸ் தேர்வில், ஒரே நாளில் ஐந்நூறுக்கு மேற்பட்ட மாணவர்களை, காக்னிஸான்ட் என்ற தனியார் நிறுவனம் பணிக்குத் தேர்ந்தெடுத்தது என்ற செய்தி அறிந்து.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 2.

*? சமீபத்தில் தங்கள் மனத்தை பாதித்த சம்பவம்?*

! முதல்வருக்கு மனு கொடுக்கச் சென்ற கல்லுக்குட்டை கிராமவாசிகள், பாதி வழியிலேயே தடுத்து நிறுத்தப்பட, காவல்துறையுடன் கை - கலப்பு, காயம் என்று வெடித்த வன்முறை. தலைமைச் செயலக வளாகம் வரை அனைவரையும் செல்ல அனுமதித்து, அதன் பிறகு, முதல்வருடன் அப்பாயின்ட்மென்ட் பெற்றிருந்த ஒரு சிலரை மட்டும் உள்ளே அனுப்பி காவல்துறை மிக அழகாக, சுலபமாகச் சமாளித்திருக்கலாம். மீண்டும் தவறிவிட்டனர்.

| ❐ ரூ 100 பரிசு பெறுபவர்: |
|---|
| சி. கார்த்திகேயன், |
| ப்ரியா ஜெராக்ஸ், |
| 13, பட்டையன் செட்டித் தெரு, |
| சாத்தூர் 626 203 |

| ★ ரூ 50 பரிசு பெறுபவர்: |
|---|
| அ.ப. ஜெயபால், |
| 16, கச்சேரி தெரு, |
| பரங்கிப்பேட்டை |
| 608 502 |



ஹுரியத் தலைவர்கள்

# விட்டுத்தரலாமா?

ஸ்ரீநகர் - முசாபராபாத் பஸ் போக்குவரத்து மறுபடி சர்ச்சை ஏற்படுத்தி இருக்கிறது. காரணம், ஹுரியத் அமைப்பைச் சேர்ந்த தலைவர்கள், ஸ்ரீநகரிலிருந்து பஸ் மூலம் முசாபராபாத் போய், அங்கிருந்து இஸ்லாமாபாத் செல்லவிருக்கிறார்கள். இது, ஸ்ரீநகர்-முசாபராபாத் இடையிலான பஸ் போக்குவரத்து குறித்த விதிமுறைகளுக்கு முரணானது என்பதுதான், "ஹுரியத் தலைவர்களை பஸ் பயணத்துக்கு அனுமதித்தது சரியா? தவறா?" என்ற சர்ச்சையைக் கிளப்பியுள்ளது.

அது சரி! 'ஹுரியத்' என்றால் என்ன?

"காஷ்மீர் சுதந்திர நாடாக இருக்க வேண்டும், காஷ்மீரை பாகிஸ்தானுடன் இணைக்க வேண்டும் போன்ற நோக்கங்களுடன், காஷ்மீர் பள்ளத்தாக்கில் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு ஜம்மு-காஷ்மீர் விடுதலை முன்னணி உட்பட சில காஷ்மீர் தீவிரவாத அமைப்புகள் தோன்றின. இவற்றுக்கு பாகிஸ்தான் அரசு மற்றும் ஐ.எஸ்.ஐ. நிதி, மற்றும் ஆயுத உதவியுடன் தார்மிக ஆதரவும் அளித்தன. அந்தச் சமயத்தில், அமெரிக்கா, இதில் மறைமுகமாக மூக்கை நுழைத்தது. அதாவது காஷ்மீர் தீவிரவாத அமைப்புகளிடம், "நீங்கள் எல்லாம், இப்படி சிதறிக் கிடந்தால், உங்கள் லட்சியத்தை அடைய முடியாது. நீங்கள் அனைவரும் ஒரே குடையின் கீழ் இணைந்து, அரசியல் ரீதியாகப் போராடுவது போன்ற முகமூடியுடன் செயல்படுங்கள்" என்று ஆலோசனை சொல்லி, அது செயல் வடிவம் பெறவும் முழுமையான ஒத்துழைப்பையும், உதவிகளையும் செய்தது. அதன்படி, காஷ்மீர் தீவிரவாத இயக்கங்களுக்கு கிடைத்த அரசியல் ரீதியான முகமூடிதான் 'ஹுரியத்!'

"காஷ்மீர் பிரச்னை குறித்த இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் இடையிலான பேச்சுவார்த்தைகளில், தங்களையும் மூன்றாவது தரப்பாக எப்பாடுபட்டாவது இணைத்துக் கொண்டுவிட வேண்டும்" என்பது ஹுரியத்தின் விருப்பம். அதை நிறைவேற்றிக் கொள்ளும் நோக்கத்தில்தான், ஹுரியத் தலைவர்கள் பஸ் பயணம் மேற்கொள்கிறார்கள் என்று அரசியல் நோக்கர்கள் கணித்துச் சொல்லுகிறார்கள்.

ஹுரியத் தலைவர்களது பஸ் பயணம் குறித்து, காஷ்மீர் பிரச்னை குறித்து ஆழமாய் அறிந்தவரும், இந்தியாவின் ஒற்று அமைப்பான இன்டலிஜென்ஸ் பீரோவின் முந்நாள் தலைவருமான பி.ராமனிடம் கேட்ட போது,

"ஸ்ரீநகர்-முசாபராபாத் பஸ் போக்குவரத்து இரு தரப்பிலும் உள்ள மக்கள், தங்கள் உறவினர்களைச் சென்று பார்க்க வசதியாய் ஏற்படுத்தப்பட்ட ஒரு முயற்சி. அதை அரசியல் ரீதியாக ஹுரியத் தனக்கு சாதகமாய்ப் பயன்படுத்திக் கொள்கிறது. இதை இந்திய அரசு கண்டிக்காதது வேதனையான விஷயம்.

இந்தியா-பாகிஸ்தான் இடையே நல்லுறவு அவசியம். இரு தரப்பும் பரஸ்பரம் விட்டுக் கொடுத்து, உறவை பலப்படுத்த வேண்டுமேயொழிய, பாகிஸ்தான் முரண்டு பிடிக்க, இந்தியா மட்டும், தொடர்ந்து ஒவ்வொரு விஷயமாய் விட்டுக் கொடுத்துக் கொண்டே வருவது, இந்தியாவின் நலனுக்கு உகந்தது இல்லை" என்கிறார்.

**- எஸ். சந்திரமௌலி**



# 5'11" Vs 6'2"

(தாய்லாந்தில் மிஸ் யூனிவர்ஸ் 2005-ஆக தேர்ந்தெடுக்கப்பட்ட கனடாவின் நடாலி கிளபோவா-வை (Natalie Glebova) தமிழ்நாட்டின் சீனியர் மோஸ்ட் யூத் சத்யராஜ் பேட்டி காண்கிறார்.)

*சத்யராஜ்:* வணக்கமுங்க அம்மணி. நீங்கதான் உலக அழகியாக்கும்?

*அழகி:* ஆமா. நான்தான் மிஸ் யூனிவர்ஸ் 2005. நீங்க யாரு?

*சத்யராஜ்:* நக்கலாக்கும்? தமிழ்நாட்டுக்கு வந்து சின்னப் புள்ளையக் கேட்டாக்கூடச் சொல்லும். என் கேரக்டரையே புரிஞ்சுக்க மாட்டேங்கிறியே! உன் வயசு என்ன அம்மணி?

*அழகி:* 23

*சத்யராஜ்:* அய்யோ... என்ன தேங்காயை உடைச்சாப்ல இப்படி பட்டுன்னு சொல்லிட்டியே! எங்க ஊர்ல பொம்பளைங்க மட்டுமில்ல, ஆம்பிளைங்க கூட வயசை சொல்லவே மாட்டோம். நம்ம உயரம் என்னங்க அம்மணி?

*அழகி:* 5'11"

*சத்யராஜ்:* அட... செம உயரம் தான். அடுத்த படத்துல என் கூட வேஷம் கட்டுறிங்களா அம்மணி?

*அழகி:* ஸாரி அங்கிள்.

*சத்யராஜ்:* லொள்ளு? சரி, உனக்கு டான்ஸ் தெரியுமா கண்ணு?

*அழகி:* எனக்கு நீச்சலடிக்கத் தெரியும். பைக் ஓட்டத் தெரியும். நான் ஒரு ஜிம்னாஸ்டிக் வீராங்கனை, நிறைய ஜெயிச்சிருக்கேன்.

*சத்யராஜ்:* அப்படியே விளையாட்டுலயே இருந்து ஒலிம்பிக்ல மெடலு, கிடலு வாங்கியிருக்கலாம்ல. ஏன் அம்மணி அழகிப் போட்டியில கலந்து கிட்ட?

*அழகி:* தயக்கத்தை, வெட்கத்தை விரட்டியடிச்சு பலர் முன்னால மேடையில சாதிக்கணும்னுதான் கலந்துக்கிட்டேன்.

*சத்யராஜ்:* என்னது வெக்கமா? அப்படின்னா என்னங்க அம்மணி? அது நம்ம வாழ்க்கையில கிராஸ் ஆனதே கிடையாது. அதான் சிபி என்ட்ரி ஆனதுக்கப்புறம்கூட, அவனை விட சின்னப்புள்ளைய ஜோடி சேர்த்துக்கிட்டு கூத்தடிச்சுக்கிட்டு இருக்கேன். உன் சின்ன வயசுக் கனவென்ன அம்மணி?

*அழகி:* ஒரு பெரிய பிஸினெஸ் உமனா வரணும். கையில ஒரு பிரீஃப்கேஸைத் தூக்கிட்டு ஸ்டைலா நடந்து வர்ற மாதிரி கனவு காணுவேன்.

*சத்யராஜ்:* அப்படிப்போடு. இன்னும் ஒரு வருசத்துக்கு விளம்பரம், டூர், சமூக சேவைன்னு செம பிஸியா அலைவீங்க. அப்புறம் காணாமப் போயிடுவீங்க. ஆனா நாம அப்படியில்ல. சிபியோட டையன் காலத்துலயும், வெக்கமே இல்லாம ஹீரோ வேசம் கட்டுவோம். ஏன்னா, நான் என்னிக்கும் யூத்து! வரட்டுங்களா?

**- முகில்**

# இளமை கல்கி

'நந்தா' படத்தில் சூர்யாவின் தங்கையாக, இயக்குனர் விக்ரமனின் பெரும்பாலான படங்களில் பேபி ஆர்டிஸ்டாக வலம் வந்த பேபி ஷீலா, இன்று தமிழ் சினிமாவின் புத்தம்புது ஹீரோயின். வயது பதினைந்து!

"நான் சின்ன வயசுல பார்க்க நதியா மாதிரி இருந்ததால, ராஜகுமாரன்ல முதன்முதலா நடிக்க கூப்பிட்டாங்க. இதைப் பார்த்து ஷங்கர் சார் 'காதலன்' படத்துல நடிக்க வைச்சாரு. அப்படியே தமிழ் சினிமாவோட முன்னணி பேபி ஆர்டிஸ்டா கொஞ்ச காலம் பிஸியாக இருந்தேன். அதிலிருந்து சினிமான்னா எனக்கு உயிராயிருச்சு. இத்தனைக்கும் எங்க குடும்பத்துக்கும் சினிமாவுக்கும் காத தூரம்" என்று கன்னத்தில் குழி விழ சிரிக்கிறார் ஷீலா.

"நான் ஒன்பதாவது படிக்கும் போது சேரன் சார் 'ஆட்டோகிராஃப்' படத்துக்காக மல்லிகா கேரக்டரில் நடிக்க ரொம்ப வற்புறுத்தினாரு. படிப்பை காரணம் காட்டி மறுக்க வேண்டியதா போச்சு" என்கிறார் ஒருவழியாக பத்தாவது முடிக்கும் சமயத்தில் ஒரு தெலுங்கு படத்தின் மூலமாக வெற்றிகரமாக ஹீரோயினாயிருக்கிறார்.

"மத்த ஹீரோயின்ஸ் மாதிரி நான் கிடையாது. படிப்பை விட

## "நான் இப்போ ஹீரோயின்!"



சினிமாவை அதிகமா நேசிக்கிறேன். ஒரு அர்த்தமுள்ள நடிகையா வாழ விரும்பறேன். வெறும் கிளாமரா, பாட்டுக்கு மட்டும் வந்து போகாம, தமிழ்ல நான் அறிமுகமாகற படமே அருமையான ஹீரோயின் சப்ஜெக்ட் படம். தமிழ்ல பட்டைய கிளப்ப நான் ரெடியாயிட்டேன்பா" என்று கட்டை விரல் உயர்த்துகிறார்.

குறிப்பு: ஷீலா என்கிற தன் பெயரை இப்பொழுது மாற்றவிருக்கிறார். வாயில் நுழையும் அழகான தமிழ்ப் பெயர் தெரிந்தவர்கள் ஷீலாவுக்குப் பரிந்துரைக்கலாம்!

**- ச.ந. கண்ணன்**

# “அலட்டினா அலர்ஜி!”

**விஜய் ஆனந்த் - சன் மியூஸிக்கின் வீடியோ ஜாக்கி - சின்னத்திரை ரசிகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். இந்த கொங்கு மண்ணின் மைந்தனுடன் பேசினோம். அப்போது ஏனோ 'கொங்குத் தமிழ்' எட்டிக்கூடப் பார்க்கவில்லை.**

“எங்க கோயம்புத்தூர்ல கோவை டீ.வின்னு ஒரு கேபிள் டி.வி இருந்துச்சு. அதுல நான் காம்பியரிங் செய்துட்டு இருந்தேன். அப்புறம் என் ஃப்ரெண்ட் மூலமா ஜெயா டீ.வில காம்பயரிங் பண்ண வாய்ப்புக் கிடைச்சது. பெரிய பிரேக் கொடுத்த புரோக்ராம்னா அது 'காசு மேல'லைவ் ஷோ தான். அதன் பிறகுதான் சீரியல் வாய்ப்புகள் வர ஆரம்பிச்சது. பெண்ணின் கதை, கலாட்டா குடும்பம், வாழ்ந்து காட்டுகிறேன். இப்படி நிறைய செய்து முடிச்சாச்சு. இப்போ கோபுரவாசல், கெட்டிமேளம், நிம்மதி சீரியல் செய்துகிட்டு இருக்கேன்.

"ஆனா எவ்வளவுதான் சீரியல் வாய்ப்புகள் கிடைச்சாலும், எனக்குப் பிடிச்சது காம்பியரிங்தான். இப்போ சீரியல் - காம்பியரிங் ரெண்டுல ஒண்ணை மட்டும்தான் செய்யணும்னு கடவுள் ஆர்டர் போட்டா, நிச்சயம் நான் காம்பியரிங்கைத்தான் தேர்ந்தெடுப்பேன். அதனாலதான் இப்போ எனக்கு சன் மியூஸிக்ல வீடியோ ஜாக்கி வாய்ப்புக் கிடைச்சதை ரொம்ப ஆர்வமா செய்துட்டு இருக்கேன்.

காம்பியரிங்ல சோலோவா புரோக்ராம் பண்றதைவிட, ஜோடியா பண்ணினா எனக்கு மட்டுமில்ல... எல்லாருக்குமே இன்ட்ரஸ்டிங்கா இருக்கும். அதே சமயம் எனக்கு இந்த அலட்டல் - ஜொள்ளு - லொள்ளு டைப் காம்பியரிங் பிடிக்காது. ஆனா அது தப்பில்ல. எனக்கு லிமிட்டைத் தாண்டாம - டீசென்டா பண்றதுலதான் விருப்பம்.

"அன்பே.. அன்பேன்னு ஒரு புரோக்ராம்ல ஓல்டு கெட்-அப்ல வந்தேன். நல்ல ரெஸ்பான்ஸ். இனிமே தொடர்ந்து வித்தியாசமா பண்ணவேன். அடுத்த ஸ்டைல் 'கொங்கு தமிழ்'ல காம்பியரிங் பண்றதுதான்...." என்று சிரிக்கிறார் விஜய் ஆனந்த்.

- முத்து



# இளமை கல்கி



"நான் வேட்டைக்குப் போய்ட்டு வரேன். ஈவினிங் வரதுக்கு கொஞ்சம் லேட் ஆகும்", "எனக்கு உன்னை ரொம்ப பிடிச்சிருக்கு. ஐ லவ் யூ" "என் கால்ல முள்ளு குத்தி

## தொட்டதுக்கும் பாட்டுதான்!

**ப்**ருஸ் சாட்வின் எனும் பயண எழுத்தாளர், தாம் ஆஸ்திரேலியாவில் சந்தித்த பழங் குடிகளைப் பற்றி ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அந்த புத்தகத்தில் பக்கத்துக்குப் பக்கம் ஆச்சரியக் குறிகள்தான். அப்படி என்ன விசேஷத்தை சாட்வின் கண்டுகொண் டார் என்கிறீர்களா? வேறொன்று மில்லை. இந்தப் பழங்குடிகள் யாரும் தங்களுக்குள் உரைநடையில் பேசிக் கொள்வதே கிடையாது. எல்லா வற்றுக்கும் பாடல்கள்தான்!

பல் தேய்ப்பதற்கு வாயைத் திறந் தால் கூட அந்த இடைவெளியில் போனால் போகட்டும் என்று ஒரு பாரா பாடி விடுவார்களாம். அது வும் எப்படி? சரமாரியாக இட்டுக் கட்டி வார்த்தைகளைக் கோத்து நூல் பிடித்ததைப் போல பாடிக் கொண்டே இருப்பார்கள்.

ஆஸ்திரேலியாவின் ஒவ் வொரு அங்குலத்தையும் தங்களது இளமை துடிக்கும் பாடல்களைக் கொண்டு இந்தப் பழங்குடிகள் நிரப்பியிருக்கிறார்கள். இவர்கள் தொடாத சமாச்சாரங்களே இல்லை என்று அடித்துச் சொல்லலாம். கங் காரு, ஓணான், வண்ணத்துப்பூச்சி, மரம், புதர், குன்று, மணல் மேடு எதையும் இவர்கள் விட்டு வைக்க வில்லை.

டுச்சு" இப்படி எதைச் சொல்ல வேண்டுமானா லும் பாடல்கள் தான். காதலர்களைப் பற்றி சொல்லவே வேண்டாம். "நம்ம லவ்வை உங்க வீட்டுல ஒத்துப்பாங்களா?" "நாளைக்கு எங்க மீட் பண்ணலாம்?" என்று பாடல்களாலே தான் இவர்கள் பேசிக் கொள்கிறார்கள்.

ஏதாவது ஒரு காதல் ஜோடி ஒரு நாள் முழு வதும் பேசிக் கொள்வதை அருகிலிருந்து கவனித்து நோட்ஸ் எடுத்துக் கொண்டால் (கொஞ்சம் கஷ்டம்தான்; ஆனால் முயன்று பார்க்கலாம்) சிறிது கட் அண்டு பேஸ்ட் செய்து, சுமார் 40 தமிழ்த் திரைப்படங்களுக்கு நல்ல பாடல்களை சுடச்சுடத் தயார் செய்து விடலாம்.

**- மருதன்**



# குறையொன்று

அடுத்தது நான்காவது படிக்கட்டு. பீதி - பயம். பரதன் கிளம்புகிறபோது தனி ஒருவனாக ராமனிடத்தில் வந்து விண்ணப்பித்திருக்கலாம். ஆனால் அவன் அப்படிப் பண்ணவில்லை. வசிஷ்டாதி மஹரிஷிகளையெல்லாம் தனக்கு முன்னாலே நிறுத்தி, "இவர்களை முன்னிட்டு, "ஹே ராமா! உன் திருவடியைப் பற்றுகிறேன். என்னை மன்னித்து ராஜ்யத்துக்குத் திரும்பி வர வேண்டும்" என்று கேட்டான்.

தனித்துப் போய் ராமனுக்கு எதிரில் நிற்க பயம் அவனுக்கு. ராமன் இவனைப் பார்த்து, 'நாம் காட்டுக்கு வரக் காரணம் இவனல்லவோ' என்று நினைத்துக் கொண்டுவிட்டால் என்ன பண்ணுவது என்கிற பீதி.

ஆசார்யர்கள் மிகவும் அழகாக இதை விவரிக்கிறார்கள். ஒரு பத்து ஏக்கரா நிலம் இருக்கிறது ஒரு விவசாயிக்கு. அதை நன்றாகப் பயிரிட்டுச் சாகுபடி பண்ணிக் கொண்டிருந்தான். ஒருசமயம் கதிர்விட்டு நன்றாக விளைச்சல் விளைந்திருக்கிறது... சாயங்கால வேளையில் வரப்பில் நடந்து போவான், ஒரு பெரிய தடியைக் கையிலே வைத்துக்கொண்டு. இப்படி ஒரு நாள் போய்க்கொண்டேயிருக்கிறபோது, அஸ்தமன வேளையிலே அவன் போகிற அந்த வரப்பிலே எட்டடி நீளத்துக்கு, நல்ல கோதுமை வர்ணத்தில் பெரிய நல்ல பாம்பானது போய்க் கொண்டிருக்கிறது வரப்பிலே... அதைப் பார்த்தான் இவன். பாம்பென்றால் படையும் நடுங்கும்; எல்லோருக்கும் பயம் ஏற்படும். ஆனால், இவனுக்குப் பாம்பினிடத்திலே பக்தி ஏற்பட்டது. கை கூப்பினான். 'இந்த க்ஷேத்திரத்திலே இவ்வளவு நெல் விளைவதற்



# ில்லை

31

குக் காரணமே இந்தப் பாம்புதான். இது இந்த க்ஷேத்திரத்தை ரக்ஷிக்கிறது' என்று பாம்பினிடத்திலே ரொம்ப பக்தி ஏற்பட்டது அவனுக்கு.

இவன் கை கூப்புவதைப் பார்த்துவிட்டு, இந்தப் பாம்பு படத்தைக் கீழே இறக்கிக் கொண்டு முன்னே போகிறது. ஊர்க் கோடியிலே ஒரு புங்க மரம். அதற்குக் கீழே பெரிய புத்து. அதற்குள்ளே நுழைகிறது அது. அதைப் பார்த்தான் அவன். பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டான். வந்தால், ராத்திரி தூக்கமே வரவில்லை அவனுக்கு. மறுநாள் ஒரு பசுமாட்டுப் பாலைப் பூரணமாய்க் கறந்தான். நுரையோடு அந்தப் பாலைக் கொண்டுபோய் புற்றினிடத்திலே வைத்து, பாம்பைப் பிரார்த்தித்தான்.

இவனுடைய பிரார்த்தனையைப் பாம்பு கேட்டதும், அழகாக புற்றை விட்டு வெளியே வந்து அத்தனை பாலையும் பருகிற்று. பருகிவிட்டு அந்தப் பாத்திரத்திலே 'டொக்'கென்று ஒன்றைப் போட்டது. அதைப் பார்த்தான் விவசாயி... தங்கக் காசு! நாகதேவதையினுடைய அனுக்ரஹம் என்று அதை எடுத்துக் கொண்டு கிருஹத்துக்குப் போனான்.



இந்த மாதிரியே ஒரு மாத காலம் அவன் பாலை வைப்பதும், அது பாலைப் பருகுவதும் ஒரு சவரனைப் போடுவதும், நாக தேவதையின் பிரசாதம் என்று அவன் அதை எடுத்துக் கொண்டு போவதும்...

கதை சொல்கிற அடியேனுக்கு கோணல் புத்தி வருகிறது. ஆனால் அந்த விவசாயியினிடத்திலே அந்தக் கோணல் புத்தியே இல்லை. இவன் வைப்பதோ இரண்டு அல்லது நான்கு லிட்டர் பால் தான். சொற்பமாக முப்பது அல்லது நாற்பது ரூபாயில் அடங்கக்கூடிய வஸ்து. ஆனால் அது அவனுக்குப் போடுவதோ மூன்று நான்கு ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள வஸ்து. இந்த மாதிரி கிடைத்தால் யார்தான் பால் வைக்க மாட்டார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது! ஆனால் அந்த விவசாயி, மதிப்பையே அவன் பார்க்கவில்லை... நாம் என்ன வைக்கிறோம், அது என்ன நமக்கு கொடுக்கிறது என்றெல்லாம் பார்க்கவில்லை. வஸ்துவையே கவனிக்கவில்லை. அனுக்ரஹம் என்று கொண்டு போய் வைக்கிறான்.

ஒருநாள், ஊருக்குப் போக

■ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் ■

வேண்டிய நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்பட்டது. ஒரே பிள்ளை, அவனுக்கு... அந்தப் பிள்ளையை அழைத்து, "இந்த மாதிரி நாக தேவதை இருக்கிறது. அதற்கு நித்யம் பால் வைக்க வேண்டும்" என்று சொல்கிறான். பிள்ளையும் "அப்படியே பண்ணுகிறேன்" என்று சொல்ல, "நான் நான்கைந்து நாளில் வருகிறேன்'' என்று அப்பா ஊருக்குப் போய்விட்டான்.

ஆனால் நடந்தது என்ன...?

அப்பா, சொன்னபடியே, பிள்ளை பாலைக் கறந்து கொண்டு போய் புற்றின் அருகே வைத்தான். பாம்பு வெளியே வந்து பாலைப் பருகிற்று. பருகிவிட்டு, 'டொக்' கென்று காசைப் போட்டுவிட்டுப் போயிற்று. அப்படிப் போட்டவுடனே இவனுக்கு ஆச்சர்யமாகப் போய்விட்டது.

'அப்பா இதைச் சொல்லவேயில்லையே' என்று எண்ணிக் கொண்டான் அவன். 'ஒருவேளை, அப்பாவுக்கு இது போல பாம்பு தங்கக் காசைப் போடவில்லையோ என்னவோ.. நமக்கு மாத்திரம் போடுகிறதோ என்னவோ...!' என்று அந்த தங்க நாணயத்தைக் கொண்டு போய் வீட்டில் வைத்தான்.

இரண்டாவது நாள் அதே மாதிரி பாலைக் கொண்டுபோய் வைத்தான். மறுபடியும் அந்தப் பாம்பு ஒரு நாணயத்தைப் போட்டது. 'இது அப்பாவுக்குப் போட்டதோ இல்லையோ?' என்று மீண்டும் நினைத்துக் கொள்கிறான்.

கூடவே இன்னொரு எண்ணமும் வருகிறது:

'இந்தப் பாம்பு, நித்யம் ஒரு சவரன் போடுகிறது என்றால், இதிலேயிருந்து என்ன தெரிகிறது... இந்தப் புற்றுக்குக் கீழே பெரிய புதையல் இருக்கிறது. அந்தப் புதையலை இந்தப் பாம்பு ரக்ஷித்துக் கொண்டிருக்கிறது. அப்படி காவல் காக்கிற புதையலிலிருந்துதான் காசைக் கொண்டு வந்து போடுகிறது. இந்தப் பாம்பையே நாம் இல்லை என்று செய்தோமானால், ஒரே நாளில் நாம் குபேரனாகி விடலாமே!' - பாம்பைக் கொன்றுவிட வேண்டும் என்று தீர்மானம் பண்ணிவிட்டான். பாலை எடுத்துக் கொண்டு வருகிறபோதே, ஒரு பெரிய கோலையும் எடுத்துக் கொண்டு வருகிறான். அன்றைய தினம் அந்தப் பாம்பு முழுசாக வெளியில் வருகிறது. வழக்கமாகத் தலையை மட்டும் வெளியிலே நீட்டும். பாலைப் பருகிக் கொண்டேயிருக்கிறபோது, மரத்தின் பின்னால் மறைந்து நின்று கொண்டு ஓங்கி அடித்தான். அது குறி தவறி பாம்பின் வாலில் பட்டுவிட்டது. தலையில் அடித்தால் கூட பாம்புக்கு அவ்வளவு கோபம் வராது; வால் நுனியில் அடித்தால் மஹா கோபம் வரும்... சீறி அவனைக் கழுத்திலே கடித்து விட்டது! மஹா விஷம் நிரம்பிய பாம்பானதனாலே கண்கள் குத்திட்டு, வாய் நுரைத்து, துடிதுடித்து இறந்துபோனான் அவன்.

> ''தலைவருக்கு எப்பவும் கரன்சி மேல தான் குறி!''
> ''எப்படிச் சொல்ற?''
> ''அவரோட சுயசரிதைக்கு 'எண்ணிப் பார்க்கிறேன்'னு தலைப்பு வச்சுருக்காரே!''
>
> - அம்பை தேவா

ஊருக்கெல்லாம் இந்த விஷயம் தெரிந்து போய், வெளியூருக்குப் போன அவன் அப்பா திரும்பி வருவதற்குள் காரியமெல்லாம் முடிந்து போய் விட்டது. இவன் வந்து கதறி அழுகிறான். 'இப்படிப் பண்ணிவிட்டாயே!' என்று கதறி அழுகிறான். தீட்டெல்லாம் போன பிற்பாடு, அந்த விவசாயி பரம பக்தியோடு பாம்பினிடத்திலே பாலைக் கறந்து கொண்டு வைக்கிறான். அப்போது அந்தப் பாம்பு பேசுகிறது... அந்தக் காலமானதனாலே பாம்பு கூடப் பேசுகிறது.

"இந்தப் பாலை நான் பருக மாட்டேன்..'' என்கிறது.

"முதலில் பருகினாயே, இப்போது ஏன் மாட்டேனென்கிறாய்...?'' என்று கேட்கிறான் விவசாயி.

அதற்கு அந்தப் பாம்பு சொல்கிறது:

"முதலில் நீ இருந்த மாதிரி இப்போது இல்லையே! அதனால் இந்தப் பாலை நான் எடுத்துக் கொள்ளமாட்டேன்'' என்று சொல்லிவிட்டது.

"அப்படியேதானே இருக்கிறேன். வேறு வித்தியாசம் இல்லையே'' என்கிறான் அவன்.

"இல்லையில்லை... நீ சொன்னால் நான் ஒப்புக் கொள்வேனா...? முதலில் என்னை தெய்வமாக மதித்து, ரொம்ப பக்தியோடு வைத்தாய் பாலை... இப்போது அதோடு கூட இன்னொரு எண்ணம் உனக்கு வந்து



விட்டது. 'என்னுடைய ஒரே பிள்ளையைக் கடித்த பாம்பு இதுதானே' என்ற எண்ணம் வந்துவிட்டது. அதனால் நீ கொண்டு வந்து கொடுக்கக் கூடிய பாலை நான் பருகமாட்டேன்'' என்று சொல்லிவிட்டது.

இந்தப் பாம்பு நினைத்த மாதிரிதான் பரதனும் நினைக்கிறான். ராமனின் எதிரில் போய் நாம் நின்றால், 'நாம் காட்டுக்குப் போகக் காரணமாயிருந்தவன் இவன் தானே!' என்கிற எண்ணம் பரதனைக் குறித்து அவனுக்கு வருமல்லவா! தம்பி நல்லவன்தான் என்ற எண்ணம் இருந்தாலும், காட்டுக்குப் போகக் காரணமாயிருந்தவன் இவன்தான் என்கிற எண்ணமும் வந்துவிட்டதனாலே, பகவானுக்கெதிரிலே போவதற்கு பரதனுக்கு பீதி... பயம்...

ஆகவே, வேதம் வல்லவர்களை முன்னிறுத்தி, வேத வித்துக்களான உயர்ந்த அதிகாரிகளை முன்னிறுத்தி, அவர்களை முன்னிட்டுக் கொண்டு பகவானுடைய சரணாரவிந்தங்களை ஆச்ரயித்தான். - இது அவன் ஏறிய நான்காவது படிக்கட்டை - பீதி என்கிற நான்காவது படிக்கட்டைக் காட்டுகிறது.

அடுத்த படிக்கட்டு - ஐந்தாவது. பிரசாதஹேது என்று சொன்னேன். அவன் உகக்க வேண்டுமென்றால் அவனால் ஆக்ஞாபிக்கப்பட்ட கடமையை நாம் சரிவரச் செய்ய வேண்டும். தசரதன் மாண்டு போன சமயம். அதற்கு உரிய கைங்கரியங்களைப் பண்ணும் பொறுப்பு ராமனுடையது. ஆனால் ராமன் அங்கேயிருந்து போயாயிற்று. அதனால் பரதனே அப்பாவினுடைய க்ரியைகளைப் பண்ணினான். அப்படிப் பண்ணாமல் பிரேதத்தைச் சித்ரகூடத்திலேயே வைத்துவிட்டு, ராமனை அவன் பார்க்க வந்திருப்பானானால், ராமன் அவனோடு பேசியிருப்பானா! அவனுக்குப் பாதுகைதான் ஈந்திருப்பானா!

பரதன் செய்ய வேண்டிய கடமை அப்பாவுக்குச் சவுண்டிகரணாந்தவம் பூரணமாகப் பண்ணி முடித்து, அதற்கப்புறம்தான் ராமனை அழைத்துக் கொண்டு போவதற்கு வந்தானேயொழிய, திடீரென்று அப்பாவின் பிரேதத்தை ஊரில் அப்படியே வைத்துவிட்டு அவன் வரவில்லை.

இதிலிருந்து என்ன தெரிகிறது..? நமக்கு விதிக்கப்பட்ட நித்ய நைமித்திக வர்ணாசிரம தர்மத்தை நாம் நடத்தினால்தான், பகவான் நமக்கு அனுக்கிரஹம் பண்ணுவான் என்று தெரிகிறது. இப்படிக் கர்மானுஷ்டானங்களை நிறைவேற்றும் ஐந்தாவது படிக்கட்டு, பிரசாதஹேது. நன்கு தெரிகிறது இது...

சாஸ்திரம் என்ன சொல்கிறது..?

ஒரு பிள்ளை பிறந்ததனாலேயே அவன் பிள்ளையாகிவிட மாட்டான்.

எப்போது அவன் பிள்ளையாகிறான் என்று கேட்டால்...

அப்பா - அம்மா உயிரோடு இருக்கிற போதே அவர்கள் சொல்படி கேட்டு நடக்கக் கூடியவனாக இருக்க வேண்டும். அந்த விதத்திலே அவன் உத்தமன் என்று பெயர் வாங்க வேண்டும்.

அதன் பிற்பாடு அவர்கள் மறைந்தால் அவன் சிரத்தையாக ஒவ்வொரு வருஷமும் சிராத்தம் பண்ண வேண்டும்.

இவனுடைய ஜீவித காலத்திலே கயைக்குச் சென்று, விஷ்ணுவினுடைய பாதத்திலே பிண்டப் பிரதானம் பண்ண வேண்டும்.

அப்படியே இந்த மூன்று கர்மாக்களை எவன் பண்ணி முடிக்கிறானோ, அவன் தான் மகன் என்ற ஸ்தானத்துக்குரியவன் ஆகிறான். இல்லையென்றால் வெறுமேயான 'புத்ரன்' என்று பெயர் பெறுவான்!

இங்கே பரதனும் புத்ரன் ஆனதனாலே, தசரதனுக்குப் பண்ண வேண்டிய எல்லாக் காரியங்களையும் பண்ணிவிட்டுத் தான் பகவான் எதிரில் வந்தான். பகவான் உகந்தான். ஆகையால் பிரசாதஹேது என்ற ஐந்தாவது படிக்கட்டை ஏறினான் அவன்.

(வளரும்)

# வசப்படுத்துகிறது!

பதினைந்து வருடங்களுக்கு முன்பே மொழி மாற்றுக் கதைகளில், கதைக்குத் தொடர்புடையது போல், அதே சமயம் தொடர்பில்லாமல் பரீட்சார்த்தமாக வரைந்த ஓவியங்களுக்கு களம் அமைத்துக் கொடுத்தது கல்கி. என் ஆரம்பக் கால கட்டங்களில் ஒரு தோழனாய் என்னை தூக்கிவிட்டதில் கல்கி இதழுக்கு பெரும் பங்கு உண்டு.

கால மாறுதலுக்கேற்ப எளிமையான முறையில் தன்னை மாற்றிக் கொண்டு, இளைய தலைமுறையினரையும் வசப்படுத்துவது, பெருமிதம் ஏற்படுத்தும் விஷயம்.

- ட்ராட்ஸ்கி மருது
ஓவியர்




படம்: ஸ்ரீஹரி


மங்கையர் மலர்
மங்கையர் சக்தி
மகத்தான சக்தி
மங்கையர் மலர் வெள்ளிவிழா
சென்னையில் ஒரு வீடு வேண்டுமா?
முன்பணம் செலுத்த வேண்டாமா!!?
EMI கட்ட வேண்டாமா!
ஜூன் 2005 இதழ் வாங்கி,
போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்!
பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி
நீங்களாகவும் இருக்கலாம்!
மங்கையர் மலர்
வீடு வழங்குவோர்
KGEYES
KGEYES RESIDENCY PVT LTD., CHENNAI.

சாந்தி A/c dts சாந்தம் A/c dts அபிராமி A/c dts உதயம் A/c dts
மினி உதயம் A/c dts பாரத் A/c dts ஸ்ரீ பிருந்தா A/c

ஆன்மீகமும், விஞ்ஞானமும் சேர்ந்தால்தான்
உலக சாதனையை ஏற்படுத்த முடியும்.
இதோ ஒரு புதிய வசூல் சாதனை.




பிரபு P.வாசு வித்யாசாகர்